## ஆசிரியர் குழு

1. திரு. கே. எம். வேங்கடராமையா அவர்கள் M. A. B. O. L.,
பிரின்ஸிபால், செந்தமிழ்க்கல்லூரி, திருப்பனந்தாள்.
2. திரு. கே. சிவராமன் அவர்கள் M. A.,
சைவ சித்தாந்த தத்துவ விரிவுரையாளர்
காசிச் சர்வகலாசாலை, காசி.
3. ராவ்சாஹிப், வித்துவான். திரு. கு. அருணாசலக் கவுண்டர் அவர்கள், தலைமைத் தமிழ் விரிவுரையாளர், ம. தி. தா. இந்துக் கல்லூரி, திருநெல்வேலி.
4. திரு. ஆ. சி. ஷண்முகநயினார் பிள்ளை அவர்கள் B. A., B. L.,
வழக்கறிஞர், தென்காசி.
5. திரு. டி. எச். விவேகானந்தம் பிள்ளை அவர்கள் B. A., L. T.,
(Verification Officer) இந்து அறநிலைய இலாகா,
20, நுங்கம்பாக்கம் ஹைரோடு சென்னை - 6.
6. திரு. ம. ரா. சண்முகசுந்தரம் பிள்ளை அவர்கள் B. A., B. L.,
இந்து சமய அறநிலைய உதவி ஆணையர் (ஓய்வு),
"வள்ளுவர் குறடு" மதுரை.

---

T. M. குமரகுருபரன் பிள்ளை B. A., B. L.,
நிர்வாக ஆசிரியர்.

## உள்ளுறை

## PRESS & REGISTRATION OF BOOKS ACT.

Registration of Newspapers (Central) Rules, 1956.
FORM IV (SEE RULE 8)
R. No. 1485/57.

Statement about ownership & other particulars about "KUMARAGURUPARAN" - ( Monthly )

| | | |
|---|---|---|
| 1. | Place of Publication | ...Srivaikuntam |
| 2. | Periodicity of its publication | ...Monthly |
| 3. | Printer's Name | ...Kumaraguruparan Achakam |
| | Nationality | ... |
| | Address | ...Sakattukara Street<br>...Srivaikuntam |
| 4. | Publisher's Name | T. M. Kumaraguruparan Pillai B. A., B. L., |
| | Nationality | ...Indian |
| | Address | ...PermanentPresident, 'Srivaikuntam Sri Kumaraguruparan Sangam' |
| 5. | Editor's Name | T. M. Kumaraguruparan Pillai B. A., B. L., |
| | Nationality | ...Indian |
| | Address | ...Managing Editor<br>...Srivaikuntam |
| 6. | Names and addresses of individuals who own the newspapers and partners or shareholders holding more than one percent of the total capital | 'Srivaikuntam Sri Kumaraguruparan Sangam'<br>...(Registered under ActXXI of 1860) |

I, T. M. Kumaraguruparan Pillai, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

T. M. Kumaraguruparan Pillai B. A., B. L.,
Signature of Publisher.

13—2—1961.



இராகம்: குறிஞ்சி. தாளம்: ஆதி.

பல்லவி

மறவாதே மனமே — மாதொரு
பாகன் மலரடி தினமே (மறவாதே)

அநுபல்லவி

துறந்தவர் அல்லவர் போற்றிடும் வகையில்
துறவுமாய் இல்லறமுமாய் இயங்கிடும் நிலையை (மறவாதே)

சரணம்

இறவாத நூல்கள் இறைவனென் றேயேத்தும்;
பிறவா நிலைதரும் பெம்மான் ஆகும்;
நிறைவும் திருவும் நன்மையும் உருவாய்
இறவான் பெரியன் சித்தன் ஆதலின் (மறவாதே)

T. B. SIDDALINGAIAH,
Lecturer in Tamil,
Banaras Hindu University,
Varanasi - 5.



உ

திருச்செந்திலாண்டவன் துணை




மலர் 12 | சார்வரி-ஹு மாசித் திங்கள் 1-ம்வ [12 – 2 – 61] | இதழ் 2

# சிதம்பரச் செய்யுட் கோவை

தருமையாதீனம் முதுபெரும்புலவர்,

**மாணிக்கவாசகன்.**

( முத்து. சு. )

[ கட்டுரை 43 ]

"நீரிற் குமிழி இளமை; நிறைசெல்வம்
நீரிற் சுருட்டும் நெடுந்திரைகள்; — நீரில்
எழுத்தாகும் யாக்கை நமரங்காள்! என்னே
வழுத்தாத தெம்பிரான் மன்று.?"

இது குமரகுருபர சுவாமிகள் திருவாக்கு என்பது நீதி நெறி வழுவாதார் யாவர்க்கும் தெரியும். இதனைச் சிதம்பரச் செய்யுட் கோவையின் ஒன்பதாவது பாடலாகவும் அறிந் திருக்கலாம்.

'இளமையும் நில்லா யாக்கையும் நில்லா
வளவிய வான்பெருஞ் செல்வமும் நில்லா.'

என்று கற்றவர்க்கும் இதன் உண்மை நன்கு புலப்படும், படினும், இம் மூன்றும் நிலைப்பனவே என்று கோடல் எளிதின் நீங்காது.

நிலையான பொருள் இவ்வுலகில் ஒன்றுமேயில்லை. எல்லாச் சமயத்தவரும் உலகில் நிலைத்த பொருள் ஒன்றும் இல்லை என்றே சொல்லுவர். உலகாயதனும் ஓரளவு நிலையாமையை உடன்படுகின்றான். சிவஞான சித்தியாரில், பரபக்கத்தில், ஐந்தாவது விருத்தத்தை நோக்கி உணர்க.

நிலையாமை ஒன்றே நிலையானது. மற்ற யாவும் நிலையல்ல. இதை வேதாந்தமும் சைவ சித்தாந்தமும் கலந்த ஒரு சமயத்தைச் சார்ந்த தத்துவராயர், அமிர்தசாரம் என்ற நூலின் கண்,

"உலகில் நிலைநிற்ப தொன்றில்லை என்றே
தலைவர்கள் மூவரும் சாற்றினார்; அஃதே
மலைவுறும் மார்க்கர் மதமும், அதனால்
நிலையின்மை ஒன்றும் நிலை."

என்று பாடியதால் அறிக. அவர் அன்னர் பலர் (தென்னாட்டில் பொதுவாகவும் சோழநாட்டில் சிறப்பாகவும்) வாழ்ந்துளர். ரிபுகீதை பாடியவர்க்கும் இத் தத்துவராயர் முதலோர்க்கும் வேறுபாடு உண்டு. திரிபுராரகசியத்தின் ஆசிரியர் கொள்கையே இது. சைவர் போல மாயாவாதத்தைக் கண்டிக்கும் பெற்றியர் இவ்வகையர். முப்பத்தாறு தத்துவங்கள் முதலியவற்றைக் கொள்ளுந் திறத்திலும் சைவத்தொடு வேறுபட்டிலர். முத்தி நிலையிலும் சிறிது வேறுபாடுளது. சைவர்கள் இத்திறத்துப்பனுவல்களையும் கற்றுணர்தல் சைவசித்தாந்தத் திறனைத் தெரிந்துணரும் ஆற்றலைத் தோற்றும்.

இளமை முதலிய மூன்றும் நிலையாமையை இனிது விளக்கும் நூற்பகுதிகள் எத்தனையோ உள்ளன! வைராக்கிய சதகத்தில் மிகச்சிறந்த முறையில் விளக்கப்பட்டுள்ளமை காணலாம்:

'இளமை நிலையாமையை உணர்வதன் தாற்பரியம் யாது? இளமை நீங்கின் எவ்வனம் எய்தும். அது கழியின் முதுமை முற்றும். அதுமுடிய உடல் மடியும். உயிர் பிரியும். இந்நிலை எய்தும் முன்னரே, உயிரைச் சிவமாக்கிக் கோடல் வேண்டும். சித்தம் சிவமாக்கிச் செய்தனவே தவம் ஆக்கும் அத்தன் அவ் வுயிரைச் சிவமாக்கி ஆள்வான். அதுவே உயிரைக் குருவுக்குக் கொடுத்தலாம்.

செல்வம் நிலையாமையை அறிவதன் கருத்து:- துன்பம் விளைக்கும் பற்றுக்கு ஏதுவானவற்றுள் பொருளும் ஒன்று. அப் பொருளை விட்டொழித்தலும் அன்றி, விட்டபொருள் மேற் கொண்ட பற்றையும் ஒழித்து, இனி எவ்வாற்ருலும் பற்றிடுதல் இன்மையே என்றறிந்து பொருளைக் குருவுக்குக் கொடுத்தலாம்.

யாக்கை நிலையாமையை அறிவதன் உட்கோள்: பெரும் பாலோர் உடலே தாம் என்று எண்ணியிருக்கின்றனர். அந்த அபிமானம் இல்லாதொழிதலே குருவிற்கு உடலைக் கொடுத் தலாம்.

"அன்றே என்றன் ஆவியும்
உடலும் உடைமை எல்லாமும்
குன்றே அனையாய் என்னை ஆட்
கொண்ட போதே கொண்டிலையோ"

என்று, மாணிக்கவாசகர் குருவிற்கு அம்மூன்றும் கொடுத்த உண்மையைக் கூறியருளிய உண்மையையும், அதனுல், அவ் வாசகர்க்கு, அம்மூன்ருலும் எய்தும் இடர்பாடு சிறிதும் இல் லாமை விளங்க,

'இன்ருேர் இடையூ றெனக் குண்டோ' என்றதையும் அறியின், நிலையாமையை யுணர்ந்து, நிலையாத பொருள்களை நிலைத்த பொருளாக மாற்றிக்கொள்ளும் பேராற்றலை இனிது எய்த வழி தெரியும். தெரிந்தவர்க்கே பற்றற்று இன்புறும் பான்மை உண்டாகும்.

உடல் உள்ளதுபோலத் தோன்றி இல்லை என ஒழிகின்றது. 'உறங்குவதுபோலும் சாக்காடு; உறங்கி விழிப்பதுபோலும்

பிறப்பு.' உறக்கத்திற்கும் விழிப்பிற்கும் இடையில் சிறிது நேரம் ஆவது வேண்டும். மின்னலின் தோற்றத்திற்கும் மறைவிற்கும் அவ்வளவு நேரம் இல்லை. மின்னைப்போலத் தோன்றிச் சடிதியில் மறையும் இயல்புடையது உடம்பு. அவ்வாறு பொய்த்துப் போகும் உடற்கு 'மெய்' என்று பெயரிட்டனர் பெரியோர்.

நினைப்பு க்ஷணத்துக்கு க்ஷணம் அழியும் இயல்புடையது. அந்நினைப்பினும் விரைந்து அழிவது உடல். 'உன்னுமுனம்' என்றால் நினையாத முன்பு என்று பொருள். அதற்கு இப் பொருளும் ஆம்,

"உண்டாங் கெனினும் இலதென் றறிஞர்கள்
பொய்யெனப் புகலவும் மெய்யெனப் பெயர்பெற்
றுன்னுமுனம் மின்னும்என
உளதாய் மாய்வது நிலையில் யாக்கை;"

இத்தகைய யாக்கை ஆயினும், அதன் அற்ப காலத்தில் ஆரோக்கியமாக இருக்கும் நிலையேனும், அவ்வுடம்பெடுத்த உயிர்க்கு உண்டோ? கிழப்பருவம்; வாதபித்தசிலேத்தும விருத்தி; அம் மூன்றுமே (நிலைகலங்கிய நிலையில்)எல்லா நோய்களுக்கும் பிஜம். அவ்விதையே கடலில் அலைபோல உடலில் திரை எழு தற்கும் மெலியாது நோய்கள் கலியாநிற்றற்கும் காரணம். கலித்தல்-மிகுதல். 'வேதநூற்பிராயம் நூறு' என்னும் பிரபந்தப் பாடலில் 'பிணிபசி மூப்புத்துன்பம்' என்று அடுக்கிய அத்தனை யும் இங்குச் சுருக்கிக் கூறப்பட்டன.

"வேண்டிய நாள்களிற்பாதியும் கங்குல்மிசு அவற்றுள்
ஈண்டிய வெந்நோய் முதலது பின்னிமை மேலதுமுப்
பாண்டின அச்சம் வெகுளிஅவா அழுக்காறங்கனே
மாண்டன சேர்தும் வளர்புன்சடை முக்கண்மாயனையே."

என்னும் பொன்வண்ணத் தந்தாதிக்கு அந்தமோ ஆதியோ இல்லை.

நிலையாத யாக்கை; அதிலே தொலையாத நோய்கள். இருந் தாலும் நோயுடன் அவ்வுடலில் இருந்து, எடுத்த உடம்பின் பயனை எய்த வழிபாடு செய்யலாம் எனிலோ எமன், பின்னு

லேயே நின்று கொண்டிருக்கின்றுன் கொலே செய்ய; முத்தலேப் படையால் குத்திமாய்க்க, பற்களேக்கடித்தும், கண்களேத் தீப் பொறி பறக்க விழித்தும், நெருப்பும் புகையும் போல விடாது இணேந்து நிற்கின்றுன். காசிக்குப் போய்க் கருமம் தொலேக்க முயன்றவனுக்கு, அங்கும் தன்னிழல் தன்ஞெடு தொடர்ந்து வரும் என்பது உலக வசனம். அந்நிழல் போல யமனும் தொடர்ந்து வருகின்றுன்.

"புன்தாங்கு அயில் முக்குடுமிப் படையொடு
எயிறலேத் தழல்விழித் துயிருணக் கனல்சேர்
புகையாம் என நிழலாம் எனத்
திரியாநின்றது கொலேசெய் கூற்றம்."

இவ்வியல்புணர்ந்து, பற்றனேத்தும் விட்டு, மெய்ப்பொருளே துணிந்த ஞானியர், தில்லேச் சிதம்பரத்தில் திருநடம் புரியும் ஆவித் துணேயாம் அற்புத மூர்த்தியின் தூக்கிய திருவடித் தாமரையைக் கும்பிட்டு இன்புறும் வாழ்வு ஒன்றையே வேண்டுவர். அதற்குமேல் வீடு பேறு யாதும் இல்லே. இருப்பினும் அது சிதம்பரத்தில் தான் உளது. வாஞேருலகிற்கும் உயர்ந்த உலகாகும் அது எனினும் வேண்டவும் செய்யார் அவ்வித்தகர். திருநாவுக்கரசர் 'மனித்தப்பிறவியும் வேண்டுவதே இந்த மா நிலத்தே' 'இன்னம் பாலிக்குமோ இப்பிறவியே' என்று, வேண்டிய உண்மையே இது. 'விண்மிசையுலகு' 'நிலமிசை' (நீடுவாழ் வார்) 'வரனென்னும் வைப்பு' 'மீதானம்' 'மிசைநிலம்' என்ற யாவும் பேரின்புலகைக் குறித்து வழங்குவன. 'நிலேயுடைய பெருந் செல்வம் நீடுலகிற் பெறலாமே' 'வாஞேர்குயர்ந்தவுலகம்' என்றதும் அதுவே. 'கூடும் அன்பினிற் கும்பிடலே அன்றி வீடும் வேண்டா விறலின் விளங்கினுர்' எனச் சேக்கிழார் அருளியதும் ஈண்டுக்கருதற்பாலது.

"விண்டுஆங்கு அகலுபு மெய்ப்பொருள் துணிவோர்
மின்பொலி பொன்புனே மன்றில்எம் உயிராம்
விமலன் குஞ்சித கமலம் கும்பிட
வேண்டுவர் வேண்டார் விண்மிசையுலகே;

'குஞ்சிதகமலம்' – 'ஆடஎடுத்திட்ட பாதம்'

———

(தொடரும்)

# பண்ணிடைத் தமிழொப்பாய்

வித்துவான். திருமதி. ப. நீலா அவர்கள்
தமிழாசிரியை,
ஸ்ரீ குருஞானசம்பந்தர் உயர்நிலைப்பள்ளி, தருமபுரம், மாயூரம்.

'புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடிஎன் மனத்தே
வழுவாதிருக்க வரந் தரவேண்டும்." — அப்பர் சுவாமிகள்.

'பொய்யா நாவதனுற் புகழ்வார்கள் மனத்தினுள்ளே
மெய்யே நின்றெரியும் விளக்கே யொத்த தேவர் பிரானை

நாற்றிசைக்கும் விளக்காய நாதனை, நின்றும் இருந்தும் கிடந்தும் நடந்தும் நினைத்து உருகிச், 'சிவ சிவ' ஒளிவளர் விளக்குகள் ஏற்றி, இறைவனைப் போற்றி வரும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் செய்துவரும் அறங்கள் மிகப்பல. கவிச் சக்ரவர்த்தியின் நடையில் இதனைக் கூறினால்,

'மெய்யாய வேதத்துறை வேந்தருக்கு ஏய்ந்தயாரும்
செய்யாத யாகம் இவன் செய்து மறந்த மாதோ'
[கம். அரசியற் படலம்-170]

என்று கம்பர் பிரான் கூறுவதுபோல ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் செய்யாத அறங்களே இல்லை என்று துணிந்து கூறலாம். நாளும் இன்னிசையால் தமிழைப் பரப்பவும், சைவ சமயம் செழிக்கவும் இவர்கள் அறக் கட்டளைகள் பல நிறுவியுள்ளார்கள். ஒல்லும் வாயெல்லாம் அறவினையை ஓவாது செய்து வருகின்றார்கள்.

செந்தமிழ் கொழிக்கும் தண்பாண்டி வளநாட்டில் அவதரித்த ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் அவர்கள், செந்தமிழ் தழைக்க வேண்டி தமிழ்த்துறையில் மாநில முதன்மை (Presidency First) பெறுகின்ற ஒருவருக்கு சிறந்த பரிசுத் திட்டம் ஒன்றினை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிநாத சுவாமிகள் திருநாமத்தால் திருப்பனந்தாளில் தமிழ்க் கல்லூரியில் நிறுவியுள்ளார்கள். இதுவும் யாவரும் அறிந்ததே. மாநில முதன்மை – தமிழில் பெறுவது அத்துணை எளிதல்ல! தமிழ்த் துறையில் புகுந்து திளைத்தால்

இளைப்பது நிச்சயம். மணிவாசகப் பெருந்தகை இந்த உண்மையை நமக்கு உணர்த்துகின்றூர்.

கன்னியொருத்தியின் காதலால் தலைவனின் உடல் மெலிகின்றது. கருத்தறியாத பாங்கன் அவனின் உடல் மெலிவினை நோக்கி தீந்தமிழின் துறையில் நுழைந்தனையா? ஏழிசைச் சூழல் புக்கனையா? என்று வினவுகின்றுன். இவ்வண்ணம் ஊனினையும் – உள்ளத்தினையும் உருக்குகின்றது ஒண்தீந்தமிழ்.

இத்தகைய உயர்தமிழிற்குப் பரிசு கொடுக்கும் சக்தி சுவாமிகள் அவர்களுக்கே உண்டு. காரணம் –

‘நன்பாட்டுப் புலவனுய்ச் சங்கமேறி
நற்கனகக் கிழிதருமிக் கருளியவனும்,

‘பண்ணிடைத் தமிழொப்பவனு’ய் இருப்பவனும் ஆன ஆலவாய்ச் சொக்கனை ஆத்மார்த்த மூர்த்தியாகக் கொண்டு நாளும் ஏத்தித் துதிக்கும் தவப்பேறுடைய ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களே ஆவார்கள். ஆகவே செந்தமிழிற்குப் பரிசு கொடுக்கும் சக்தியைப் பெற்றுள்ளார்கள்.

இந்தப் பரிசு ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் அவர்கள் நினைவுப் பரிசாகும். ரூபாய் 1000/– (ஆயிரமும்) மாநில முதன்மை பெற்றவருக்கு உரிமையாக்கப்படும். 1959 – 60-ல் வித்துவான் நிறைநிலைத் தேர்வு எழுதிய எளியேன் இவ்வாண்டு இப்பரிசைப் பெறுகின்ற பேறு பெற்றேன்.

‘என்னை நன்ருக இறைவன் படைத்தனன்
தன்னை நன்ருகத் தமிழ் செய்யுமாறே.’

என்ற திருமூலரின் அருள்வாக்குத்தான் மேற்கண்ட நற்செய்தி எனக்குக் கிட்டியபோது என்னுள்ளே எழுந்தது.

அதன்படி என் னு மு ள தென்தமிழிற்கும், தமிழையும், சைவத்தையும் கண்களென ஓம்பிக் காத்து வருகின்ற ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகா சந்நிதானம் அவர்களுக்கும், ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களுக்கும் மீளா அடிமையாய்த் தொண்டு செய்வேன். எழுமை எழுபிறப்பும் நன்றியறிதல் உள்ளவளாயிருப்பேன்.

எனது மன மொழி மெய்களால் ஆன வணக்கத்தை நன்றியறிதலை இக்கட்டுரையின் மூலம் தெரிவித்துக் கொள்கின்றேன்.

# மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்

## உரைநடை



தருமபுர ஆதீன வித்துவான்
"திருவண்ணாமலை ஆதீனவிரிவுரையரசு, மதுரை ஆதீனச் சித்தாந்த
சைவ வித்தகர், சித்தாந்தப் புலவர்மாமணி, பாலகவி"
வயிநாகரம் திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,
தேவகோட்டை.

---

(மலர் 11, இதழ் 4 – ன் தொடர்ச்சி)

### அம்மானைப் பருவம்

கரைக்குங் கடாமிரு கவுட்குட முடைந்தூற்று
களிறு பெரு வயிறு தூர்ப்பக்
கவளந் திரட்டிக் கொடுப்பதென வுஞ்சூழ்ந்தொர்
கலைமதிக் கலசவமுதுக்
கிரைக்கும் பெருந்தேவர் புன்கண் டுடைத்திட
எடுத்தமுத கலசம் வெவ்வே
றீந்திடுவ தெனவுமுழு முத்திட் டிழைத்திட்ட
எறிபந்தி நிரை யென்னவும்
விரைக்குந் தளிர்க்கைக் கொழுந்தா மரைத்துஞ்சி
மீதெழுந் தார்த்த பிள்ளை
வெள்ளோ திமத்திரளி தெனவுங் கரும்பாறை
மீமிசைச் செஞ்சாந்துவைத்
தரைக்குந் திரைக்கைவெள் ளருவிவை கைத்துறைவி
அம்மானை யாடியருளே
ஆகங் கலந்தொருவர் பாகம் பகுந்தபெண்
அம்மானை யாடியருளே. – 73

சிந்தூரம் முதலியவற்றைக் கரைக்கின்ற மதநீரை இரண்டு கவுட்குடங்களும் உடைந்து சிந்துகின்ற யானையினது பெரிய வயிறு நிரம்பும்படி கவளத்தைத் திரட்டிக் கொடுப்பதுபோலவும், ஒப்பற்ற கலைகளையுடைய சந்திரனாகிய குடத்திலுள்ள அமுதத்

துக்குத் தேவர்கள் சூழ்ந்து இரைக்கின்ற துன்பம் நீங்கும் பொருட்டு வேறுவேறு அமுத கலசங்களை எடுத்துக் கொடுப்பது போலவும், விளைந்த முத்துக்களால் செய்யப்பெற்ற ஒளி வீசு கின்ற பந்தல் வரிசையைப் போலவும், நறுமணமுள்ள தளிர் போன்ற கையாகிய செழுமையான தாமரை மலரில் உறங்கி மேலெழுந்து ஆரவாரித்த இளையவெள்ளன்னத்தின் தொகுதி யிதுவென்று சொல்லும்படியாகவும் கருமையான பாறைகளின் மீது செஞ்சந்தனக் கட்டையை வைத்து அரைக்கின்ற அலை யாகிய கையையும் வெள்ளி அருவியையும் உடைய வையைத் துறைவியே! அம்மானையாடி அருளுவாயாக! திருமேனியில் கூடி ஒரு பாகத்தைப் பகிர்ந்து கொண்டபெண்ணரசியே! அம்மானை யாடி அருள்வாயாக!

திங்கட் கொழுந்தைக் கொழுந்துபடு படர்சடைச்
செருகுதிரு மணவாளன் மேற்
செழுமணப்பந்தரி லெடுத்தெறியு மமுதவெண்
திரளையிற் புரளு மறுகாற்
பைங்கட் சுரும்பென விசும்பிற் படர்ந்தெழும்
பனிமதி மிசைத்தா விடும்
பருவமட மானெனவெ னம்மனைநி னம்மனைப்
படைவிழிக் கயல்பாய்ந்தெழ
வெங்கட் கடுங்கொலைய வேழக்கு ழாமிதென
மேகக் குழாத்தை முட்டி
விளையாடு மழகளிறு கடைவாய் குதட்ட முகை
விண்டவம் பைந்து கோத்த
அங்கட் கரும்பேந்து மபிடேக வல்லிதிரு
அம்மானை யாடியருளே
ஆகங் கலந்தொருவர் பாகம் பகுந்தபெண்
அம்மானை யாடியருளே. – 74

பிறைத்திங்களைக் கொழுந்து விட்டோடுகின்ற விரிந்த சடையில் சூடிய அழகிய மணவாளன்மீது செழுமையான மணப் பந்தலில் நீ எடுத்து எறிந்த வெள்ளிய அமுதத்திரளைபோல் புரளுகின்ற ஆறு கால்களையும் பசிய கண்களையுமுடைய வண்டு போலவும், வானத்தில் படர்ந்து எழுகின்ற குளிர்ந்த திங்களின் மீது தாவும் இளம்பருவ மானைப்போலவும், எனது தாயாகிய

நினது அம்மானைத்திரளின் பக்கத்தில் உன் கருங்கண்கள் பாய்ந்து எழும்பக் கொடிய கண்களோடு கடிய கொலையை யுடைய யானைக்கூட்டம் இதுவென்று எண்ணி மேகக்கூட் டத்தை முட்டி விளையாடுகின்ற இளங்களிறுகள் கடைவாயை மெல்ல அரும்புவிரிந்த மலர்ப்பாணங்கள் ஐந்தையும் தொடுத்த அழகிய கணுக்களையுடைய கரும்புவில்லைத் தாங்கும் அபிடேக வல்லியே! அம்மானையாடி அருளுவாயாக! திருமேனிற்கூடி ஒரு பாகத்தைப் பகிர்ந்து கொண்ட பெண்ணரசியே! அம்மானை யாடி அருள்வாயாக!

கள்ளூறு கஞ்சக் கரத்தூறு சேயொளி
கலப்பச் சிவப்பூறியும்
கருணைப் பெருக்கூற வமுதூறு பார்வைக்
கடைக்கட் கறுப்பூறியும்
நள்ளூறு மறுவூ றகற்றுமுக மதியில்வெண்
ணகையூறு நிலவூறியும்
நற்றரள வம்மனையொர் சிற்குணத் தினைமுன்று
நற்குணங் கதுவல்காட்ட
உள்ளூறு களிதுளும் பக்குரவ ரிருவீரும்
உற்றிடு துவாதசாந்தத்
தொருபெரு வெளிக்கே விழித்துறங்குந் தொண்டர்
உழுவலன் பென்புருகநெக்
கள்ளூற வுள்ளே கசிந்தூறு பைந்தேறல்
அம்மானை யாடியருளே
ஆகங் கலந்தொருவர் பாகம் பகுந்தபெண்
அம்மானை யாடியருளே. – 75

தேன் ஊறுகின்ற தாமரை மலர் போன்ற திருக்கரத்தில் பரவிய செவ்வொளி கலத்தலால் சிவப்பு நிறத்தை அடைந்தும் கருணை மிகுதியால் அமுதம் ஊறுகின்ற பார்வையோடு கூடிய கடைக்கண்ணினது கரு நிறத்தைப் பெற்றும் நடுவிலுள்ள கறை யூறலை நீக்கி விளங்குகின்ற முகமதியில் உள்ள வெள் ளொளியின் நிலவைக்கொண்டும் நல்ல முத்தாலாகிய அம்மனை ஒப்பற்ற ஞானத்தை உயர்ந்த முக்குணங்களும் பற்றி நிற்கும் தன்மையைக் காட்ட மனத்தில் சுரக்கின்ற மகிழ்ச்சி பொங்க இருமுது குரவராகிய நீங்கள் தங்கியிருக்கும் துவாத சாந்தம்

என்னும் ஒப்பற்ற பெருவெளியின் கண் விழித்துக் கொண்டே உறங்குகின்ற மெய்த் தொண்டர்கள் தமது உழுவல் அன்பினுல் என்புருக மனம் நெகிழ்ந்து வாயூற, உளங்கசிந்து சுரக்கின்ற பசிய தேனே! அம்மானையாடி அருளுவாயாக! திருமேனியிற் கூடி ஒரு பாகத்தைப் பகிர்ந்துகொண்ட பெண்ணரசியே! அம்மானையாடி அருள்வாயாக!

குலைபட்ட காந்தட் டளிர்க்கையிற் செம்மணி
குயின்றவம் மனைநித்திலம்
கோத்தவம் மனைமுன் செலப்பின் செலுந்தன்மை
கோகனக மனையாட்டிபாற்
கலைபட்ட வெண்சுடர்க் கடவுடோய்ந் தேகவது
கண்டுகொண் டேபுழுங்கும்
காய்கதிர்க் கடவுளும் பின்ருெடர்வ தேய்ப்பக்
கறங்கருவி தூங்க வோங்கும்
மலைபட்ட வாரமும் வயிரமும் பிறவுமா
மாமணித் திரளை வாரி
மறிதிரைக் கையா லெடுத்தெறிய நாற்கோட்டு
மதகளிறு பிளிறி யோடும்
அலைபட்ட வைகைத் துறைச்சிறை யனப்பேடை
அம்மானை யாடியருளே
ஆகங்கலந் தொருவர் பாகம் பகுந்தபெண்
அம்மானை யாடியருளே. —76

குலையாகிய காந்தள் மலர் போன்ற தளிர்க்கரத்திலுள்ள செம்மணிகள் கொண்ட அம்மனை முத்துக்கள் கொண்ட அம்மனை முன்னே போகப் பின்செல்லும் காட்சி தாமரையாகிய தன் மனைவியினிடத்துக் கலைகள் பொருந்திய வெள்ளொளி திங்கள் வந்து புணர்ந்து செல்ல அதுகண்டு மனம் புழுங்குகின்ற வெப்ப ஒளியையுடைய சூரியனும் பின்தொடர்ந்து போவதை நிகர்க்க ஒலிக்கின்ற அருவிகள் பாயும் உயர்ந்த மலையிலுண் டான முத்துக்களும் வயிரங்களும் மற்றவைகளுமாகிய மணி களின் தொகுதியை வாரி மறிகின்ற அலக்கைகளால் எடுத்து வீச நான்கு கொம்புகளையுடைய மதயானையாகிய ஐராவதம் பிளிறி ஓடுவதற்கு ஏதுவாகிய அலைகளையுடைய வையை நதி யின் துறையிலுள்ள சிறையன்னப்பேடையை ஒத்தவளே! அம் மானை ஆடி அருள்வாயாக! திருமேனியிற்கூடி ஒரு பாகத்தைப் பகிர்ந்து கொண்ட பெண்ணரசியே! அம்மானையாடி அருள் வாயாக!

———

[தொடரும்]

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

## I

## SAMBANDAR

(Tamil: TIRU JNANA SAMBANDAMURTI SWAMI)

In the first half of the seventh century A. D. the worship of Siva was at its lowest ebb, overpowered by the Jainism and Buddhism which prevailed throughout the Tamil country. But a few pious Saivites remained faithful. One of them, whose name means that his heart was laid at Siva's foot, and who lived in the town in the Tanjore District now known as Shiyali, prayed to the Siva, worshipped in the Shiyali temple that he might be given a son who would dispel the godless dark and win men to Lord Siva again. Sambandar's birth was the answer to that prayer. At the tender age of three, so orthodox Saivites believe, this child was fed by Siva's spouse with milk from her divine breast, mingled with divine wisdom, whence he is called in his full name, "The man connected with wisdom divine," Tiru Jnana Sambandar.

He grew up to be a pilgrim poet, who visited most of the Saivite shrines with which South India abounds, in each place singing the praise of the Siva

---

whom there he worshipped. The cause he loved suffered a severe blow when the great king of Madura, with many of his subjects, went over to the Jain religion. The queenconsort and her prime minister (see stanzas 20 and 21) remained faithful to Saivism, and sent for Sambandar. The lonely saint faced a vast multitude of Jains in the royal presence, conquered them in argument, and reconverted the king. Eight thousand of the stubborn Jains, with Sambandar's consent, were impaled alive. Later on, after a similar adventure in another of the three great kingdoms of the Tamil country of his time, Sambandar converted to Saivism a crowd of Buddhist opponents.

This is about all that is known of a man who helped to sing Buddhism right out of Southern India, and who composed the collection of hymns which stands first among the canonical works of Saivites. Legends make him a wonder-worker, but we must draw our knowledge of the man from his poems themselves. He certainly was skilful in the handling of the many metres in which Tamil poetry is written, and it is not impossible that his productions were as effortless as the stories of him tell. That is their weakness, for there is not very much of heart religion in them. But they seem to have powerfully helped in that process of eliminating Jainism and Buddhism from India of which we know so little, though it was complete enough to be one of the marvels of history. Their author holds the foremost place among the four great 'Saivite Preceptors' (Sivacharyar) and some call him the incarnation of one of the sons of Siva.

His date seems to be one of the few clearly established dates in the history of the religion of the country.

Stanza 19 shews that he was a contemporary of another great early Saivite, whose name means "Little Servant of God," and who is known to have fought in a battle which took place in 642 A. D.

---

1. தோடுடையசெவியன்விடையேறியோர்தூவெண்மதிசூடிக்
காடுடையசுடலைப்பொடிபூசியென்னுள்ளங்கவர்கள்வ
னேடுடையமலரான்முனைநாள்பணிந்தேத்தவருள்செய்த
பீடுடையபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே.

We begin with the first verse which the author composed. According to the legends he uttered it at the age of three, on the banks of the temple tank at Shiyali (once Bramapuram), after Siva's consort had fed him with milk from her own breast. The stanza itself of course contains no allusion to the story, but it is one of the best known verses in the Saivite hymn-book.

1. His ears are beringed, He rideth the bull;
His head is adorned with the crescent moon's ray;
White is He with ash from the burning-ground swept;
And He is the thief who my heart steals away.
Great Brahma enthroned on the lotus' full bloom
Erstwhile bowed him down and His glory extolled,
And singing received he the grace of our lord
Who dwelleth in famed Bramapuram old.

---

# அறம் அழித்தாய்

திருமதி ஜெ. புவனேசுவரி அவர்கள்,
'சோமாஸ் நிலேயம்', வள்ளீஸ்வரன் தோட்டம், சென்னை – 28.

தூய வெண்மையான விசும்பை கரியதிரை மூடி விடுகிறது. புற இருளைப் போக்க பகலவன் வானிடையே பவனி வருகிருன். அது காறும் தூங்கிய மனிதன், விலங்கு, பறவை ஆகிய அனைத்துயிர் சீவராசிகளும் புதுமைப் பொலிவுடன் எழுகின்றன. வாடிய மலர் வசந்த காற்றுடன் மணம் வீசுகிறது. கூட்டிடையே உறங்கிய பறவை ஒலிப்பெருக்கியாகத் திகழ்கிறது. தன் ஒலியால் வையகத்தை எழுப்புகின்றது. தாவரம், விலங்கு, பறவை இவைகளை அடிமைப் படுத்திய மனிதன் ஒரு கணம் வசந்தக் காற்ருேடு வரும் மலரின் நாற்றத்தில் உள்ளத்தைப் பறி கொடுக்கிருன். ஆம்! தன்னிடத்துள்ள வாசனையை அம்மலர் பலரும் நுகரஉதவுகிறது. தன் மணத்தைத் தானே அடக்கிக் கொள்ளாத அதன் தன்மையைக் கண்டு மனத்தில் தானும் பலருக்கு உதவவேண்டும் என்று தோன்றுகிறது. தன் உயிரை உதவிக்கே அர்ப்பணித்தாலும் கூடஅறத்திற்கே முக்கியத்துவம் கொடுத்து அர்ப்பணிக்க வேண்டும். இவ்வெண்ணம் அவன் உள்ளத்தின்கண் அறத்தை வளர்க்கிறது. அறநெறியில் வாழ்வதன் பயனுகப் பெறும் இன்பமே இன்பமாகும்.

உலகத்தில் மனிதன் இருவித உருவம் கொண்டு திகழ்கிருன். ஒன்று தன்னலம், மற்ருென்று பொது நலம். தன்னலத்தால் அவன் அடைவது இழிவு. பொதுநலத்தால் அவன் பெறுவது சிறப்பு. தன்னலம் பூண்டொழுகும் போது அறம், வாய்மை, குலப்பெருமை யாவும் அழிந்து விடுகிறது. தன்னலப் பேய் தரணியில் உள்ளோரைக் கலங்க வைக்கும்.

பொதுநலமோ பொன்போற் மதிக்கப்படுவது. பொதுநலத்தின் போது ஒருவன் நன்மையே செய்ய விழைவான். அவன்

அடையும் துன்பங்களோ எண்ணிறந்தவை. பரந்த உலகத்தில் விரிந்த மனப்பான்மையுள்ளோர் பொதுநலத் தொண்டன் செய்யும் தீயதைப் பொருட்படுத்தாது 'நல்லனவற்றைச் செய்ய அவன் மேற்கொள்வது' என்று கூறுவர். குறுகிய பான்மையர் பொது நலமாயினும் 'நல்லனவற்றிற்கு அல்லவை செய்வது அழகன்று' என்று கண்டிப்பர். சீர் கொண்டு பார்ப்போமே யானல் பொது நலத்தின்போது செய்யும் தீங்கு மக்கள் நன்மைக் காக ஆகும். ஆனல் தன்னலத்திற்காகச் செய்யும் தீங்கோ மிக மிகக் கொடிது.

தன்னலம் குடிப்பிறப்பு அழிக்கும், பிடித்த பெரும்புணையாம் அறத்தை அப்புறப்படுத்திவிடும்.கடைப்பிடிக்கும் குறிக்கோளைத் தகர்த்துவிடும். தன்னல மனம் வரும்போது அறத்தில் தாழ்ந்து, ஆசையில் உயர்ந்து விடுகிறோம். ஆசை 'வித்து' அளவு கடந்து வளர்ந்து விட்டால் அதற்கு அவன் அடிமை. பரி பூர்ணனை செம்பொருள் ஒன்றுக்கே அடிமைபுரிய வேண்டிய மனிதன் ஆங்கண் அவாவிற்கு அடிமையாகி தன்னலம் உருவம் கொண்டு வாழும் போது இகழ்ச்சி அவனை அடைகிறது.

பெண்ணசை, பொன்னசை, மண்ணசை என்று முப்பெரும் குணங்களை அடக்கி வாழ வேண்டுமானல் அவா அறுக்க வேண்டும். ஆனல் இது தன்னலத்தின் போது அறுகாமல் இறுகிப் பிடித்துக் கொள்கிறது. பொன்னசை, மண்ணசை ஒழித்து வந்த உத்தமகுண இராமன் பெண்ணசையால் குரங் கிடம் இழிவுச் சொற்கள் கேட்கிறன்.

கடமையுணர்ந்து இராமன் காடேகி, தவத்தை மேற்கொள்ள வந்தான். பல முனிவர்களின் அன்பில் திளைத்து வாழ்ந்தான். சேய் ஒன்று தனக்கு விருப்பமான ஒன்றைக் கையில் வைத்துக் கொண்டிருக்கும்போது, மற்ருெரு சேய் துன்புறுத்தி வாங்கிக் கொண்டு தன்னகத்தே வைத்திருப்பதைக் கண்டு வருந்தியும் அதை எப்படிப் பெறுவது என்றும் எண்ணி வருந்துவதுபோல் சீதையை இழந்தான் இராமன். நாடு, தாய், தந்தை அயோத்தி மக்களைப் பிரிந்ததுகூட அவனுக்கு அவ்வளவு துன்பம் தர வில்லை. ஆனல்! சானகியின் பிரிவு அவனுக்குச் சொல்லொணு வேதனையைத் தந்தது. மீட்கும் வழிதோன்ருது, சோக உருவ

மாய் வந்து சேர்ந்தான் இருசிய முக மலைக்கு. கருணை உள்ளத்திலுள்ள கலங்கத்தைப் போக்க அனுமன் ஆங்கண் தோன்றினான். அனுமனே தலைவனும் சுக்ரீவனிடம் இராமனை சேர்ப்பித்தான். கருணை வள்ளலோ இராவணனிடம் தன் மங்கையைப் பறி கொடுத்து மதி மயங்கி நிற்கிறான். சுக்ரீவனோ தன் தமையனிடம் தனையாண்டாளைப் பறி கொடுத்துப் பரிதவிக்கிறான். இச் சமயத்தில் இரு உள்ளங்களும் ஒரே எண்ணத்தில் உழலுவதால் இரண்டும் மிகவிரைவாக நட்புப் பூண்டுவிட்டது. சுக்ரீவன் சீதையின் ஆபரணங்களை இராமனிடம் காட்டினான். அந்த ஆபரணங்களோ இராமனுக்கு மன வேதனையை அளித்தது. சிந்தையை யடக்கி சுக்ரீவனின் வேண்டுகோளுக்கு இணங்கி, புறப்பட்டான் வாலியை ஒழிக்க. அம்பு எய்தி அவன் ஆவியை அகற்ற அக மகிழ்வுடன் இராமன் சென்றான்.

வாலிக்கும், சுக்ரீவனுக்கும் இடையே கடும்போர் நடந்தது. மலையோடு மலை மோதியது போல் இருவரும் மோதினர். அப்போது அவர்களின் கண்களிலிருந்து புறப்பட்ட தீப்பொறிகளால் மேகங்களும், மலைகளும் எரிந்தன. யானையைச் சிங்கம் கொல்வதுபோல் வாலி சுக்ரீவனைத் தாக்கினான். சுக்ரீவனை இறுகப் பற்றி அவன் உயிரைப் பிய்க்கும் தருவாயில் எங்கிருந்தோ வந்த ஒரு அம்பு வாலியை வலிவு இழக்கும்படி செய்தது. மார்பிலே பாய்ந்த அம்பு உடலின் மறு புறம் சென்று விடாமலிருக்கும்படி அதை எடுத்தான்! உணர்ந்தான்! சிரித்தான்! 'இராமன்' என்ற திரு நாமமிட்ட அதனைப் பார்த்து எள்ளி நகையாடினான்.

" இராமா! இல்லறம் துறந்த தம்பியே! நீயேன் நல்லறம் துறந்தாய்! வாய்மையும், மரபும் காத்தும் மன்னுயிர்துறந்த வள்ளலே! நின்மதி எங்குச் சென்றது? நினக்குப்பின்னால் தோன்றிய பரதன் இராச தருமம் உணர்ந்து, வரும் தீங்கை ஒழிக்க நாட்டையாளும் பணியைக் கை விட்டான். அத்தகையோனுக்கு முன்பாக, அண்ணனாகத் தோன்றினாயே! பிறர் தீங்கு செய்யலாகாது என்று கூறி தான் தீங்கு செய்யலாம் என்று கூறுபவனைப் போல் உள்ளதே உன் செயல். தீமை பிறருக்குச் செய்யக்கூடாது என்று எண்ணுபவன் ஓரறிவு உயிர் முதல் ஆறறிவு உயிர் ஈறாக அனைத்துயிரிடமும் காட்ட வேண்டுமே!

அழிவு வராமல் காக்கும் அறிவை எங்கே விட்டுவிட்டு இச் செயல் செய்ய முனைந்தாய்! தந்தையின் கட்டளையாகத் தாயின் சொற் கேட்ட வேந்தே! ஆங்கண் தாயின் சொல்லை. வேதமாகக் கொண்டு முறைமை, பிறர்துன்பம் எல்லாவற்றைவும் தகர்த்து இங்கு வந்தாய்! தாயின் சொல்லுக்குத் தடை கூறுது இட்டகட் டளையை இனிது முடிக்கப் போகும் நீ என் தம்பியின் சொல்லைக் கேட்டு ஆராயாது நீ ஏன் இக்கொடிய செயலில் புகுந்தாய்" என்று வாலி கூறுகின்றுன். எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருளின் கருத்தை உய்த்துணர்ந்து செய்வது தானே பகுத்தறிவாளரின் கடமை. இங்கு இராமன் அறிவு மங் கப்படுவதின் காரணம் பெண்ணுசைதான்.

குலம், கல்வி, தருமம், கொற்றம் இவையெல்லாம் நன் குணர்ந்த இராமன் வாலி விடயத்தில் குற்றவாளியாகத் திகழ் கிருன். கற்றபடி நடப்பதுதான் அழகு. அதுவும் குலத்தின் வழி நடப்பது அதைவிடச் சிறந்தது. அதை உணர்த்த வரு கிருன் வாலி. தீங்கு செய்பவனைத் தண்டிப்பது உலக இயற்கை யாயினும், அத்தீங்கு செய்பவனை குலதர்மத்தின்படி தண் டிப்பது பண்டைய மரபு. ஆனுல் அருள் உள்ளம் பூண்டொழுகும் மனிதர் அறவோர் எனப்படுவர். எல்லா உயிர்களிடத்தும் செம்மையான அருளை மேற்கொண்டு ஒழுகுவதால் அறவோரே 'அந்தணர்' எனப்படுவர் ஆவர். "அத்தகைய அந்தணக் குலத் தில் பிறந்த நீ இப்படிச் செய்வது நியாயமா? அழிக்க முடியாத ஓவியமாய் நிற்கும் இவ்வுண்மையை நீ அழித்தாய்! மனைவியை நினைந்தாயோ ?" இதுகாறும் அறவழியில் வாழ்ந்த இராமன் இப்போது மருண்டு வாழக்காரணம் பெண்ணுசைதான் என் கிருன் வாலி. உண்மைதான்! பெண்ணுசைக் காரணத்தால் மனிதன் ஒரு நிலையான வழியில் நின்று கடமை புரிவது முடியவில்லை. பொன்னுசையால் லோபித்தனம் ஏற்படும். மண் ணுசையால் உயிர்களின் குருதி ஆருக ஓடும். ஆனுல் பெண் ணுசையாலோ ஆண்மையும், ஆய்ந்த அறிவும் அழிந்துவிடும் என்ற உண்மையை விளக்கக் கம்பர் குலதருமம் காட்டி பெண் ணுசையால் விளைந்ததை வாலி மூலம் காட்டுகிருர்,

"கோவியல் தருமம் உங்கள் குலத்துதித் தோர்கட் கெல்லாம்
ஓவியத் தெழுத ஒண்ணு உருவத்தாய் உடைமை யன்றே

ஆவியைச் சனகன் பெற்ற அன்னத்தை அமிழ்தின் வந்த
தேவியைப் பிரிந்த பின்னைத் திகைத்தனை போலும் செய்கை."
— வாலி வதைப்படலம். கம்பராமாயணம்.

மதம் கொண்ட யானையை மடக்கலாம். நஞ்சு மிகுந்த நாகத்தை ஆட்டலாம். நீரிலே நடக்கலாம். நெருப்பின்மீது இருக்கலாம். எட்டாத கனியாம் சித்தியையும் அடையலாம். இவற்றையெல்லாம் புரிவதைவிட சிந்தையை அடக்கவேண்டும். மடியாத சனனப் பெருங்காட்டிலே இம்மனதை ஒரு நிலையில் வைப்பது அரிது. இம்மனதை ஆன்றோர் குரங்குக்குச் சமானமாக கூறுகிறார். மனிதனே குரங்கு மனம் பெற்று இருக்கும்போது குரங்கு எப்படி இருக்கும் ? சொல்லித் தெரியவேண்டிய விடய மல்ல ! மனிதனே சட்டம் என்று ஒன்றை ஏற்படுத்தி அதில் புகுந்து அதற்குக் கட்டுப்பட்டு வாழ்கிறான். பல முறைகளை ஏற்படுத்தி அதைச் செயலால் நாட்டுகிறான். இது பகுத்தறி வாளர் செய்யும் செயல்! இதனை மனிதன் பகுத்தறிவற்ற அஃறிணைப் பொருளிடம் காணமுடியுமா ? "சானகியைப் பிரிந்து கருத்தழிந்தேன், நீ சுக்ரீவன் மனையாளை அடைந்து மதியிழந் தாயோ" என்று இராமன் கேட்டதற்கு முன்பேகுரங்குத் தன்மை யைக் கூறுகிறான் வாலி. ஒழுக்கத்தை உயிரைக் காட்டிலும் ஓம்பும் நீ எம்பால் அதனை எப்படி காண இயலும் ? உனக்குத் தீங்கு செய்தவன் இனிது இருக்க, குரங்கினத் தலைவனாகிய என்னை கொல்லும்படி நின்மனுநூல் நினக்கு வலியுறுத்தி கூறி யதோ ? என்கிறான் வாலி. நல்வழியை நோக்காமல், பொருத்த மானவற்றைச் செய்யாமல், பழியைப் பார்க்காமல், நற்பண்பும் இல்லாதவனாயிருந்தால் அவன் பகைவர்க்கு எளியனாவன்,

"வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்
பண்பிலன் பற்றார்க்கு இனிது." — குறள்.

"முறையின்றி, ஒழுக்கமின்றி இருக்கும் எளியவனாகிய என்னை நீ கொடுமைப் படுத்தினாயே ! இது உனக்கு இகழ்தானேயன்றி புகழில்லை" என்கிறான் வாலி.

அன்றொரு நாள் கையிலே அம்பெய்தி, தம்பி இலக்குவன் உடன்வர மாமுனிவனுடன் யாகம் காக்கச் சென்றான். பாவ மெல்லாம் பெண்ணுருவமாகக் கொண்டு வளம் மிகுந்த மருத

நிலத்தைப் பாலைவனம் ஆக்கிய தாடகையைத் தலைவன் கொல்லச் சொன்னான். மாவேள்வி இயற்றி வாழும் மாமுனிகளுக்கு அவள் இயற்றிய கொடுமையைச் சொல்லால் புனைந்துரைக்க முடியாது. அத்தகையோளை 'நின் அம்பால் சாய்க்க' என்று முனிவன் கட்டளையிட்டபோது சூரியகுல மைந்தன் கணநேரம் தயங்கினான். ஏன்? பாவரூபமான அரக்கியே யானாலும் பெண்ணென மனதில் கொண்டான்.

"அண்ணல் முனிவற்கு அதுகருத்தெனினும் ஆவி
உண் என வடிக்கணை தொடுக்கிலன் உயிர்க்கே
துன் எனும் வினைத்தொழில் தொடங்கியுள ளேனும்
பெண்என மனத்திடை பெருந்தகை நினைந்தான்."

— கம்பராமாயணம். தாடகை வதைப்படலம்.

தீயினும் கொடியது தீச்செயல். அச்செயலைச் செய்பவர் யாராயினும் அதை அழிப்பதுதான் சிறந்தது. பேய்க்குணம் கொண்ட தாடகை பெண்ணல்ல! எடு அம்பை என்று, முனிவன் கூறும்படி தயங்குகின்றான். இது பொதுநலம் தானேயென்று அவன் மனம் நினைக்கவில்லை.

இன்றோ அவன் தன்னலத்தால் ஆராய்ந்த அறிவு பெறவில்லை. ஒரு காரணமுமின்றி வாலியைப் பகைத்து அவனைக் கொன்று விட்டான். கொடிய அரக்கியிடம் இரக்கம் காட்டும் அவன் உள்ளம் வாலியிடம் மட்டும் இரக்கம் காட்டவில்லையே என்று அவன் மனம் நைந்து கூறும் பாடலைக் காண்போமாக!

"அரக்கர் ஓர் அழிவு செய்து கழிவரேல் அதற்குவேறோர்
குரக்கினத்து அரசைக் கோறல் மனுநெறி கூறிற்றுண்டோ
இரக்கம் எங்கு உகுத்தாய் என்பால் எப்பிழைகண்டாய்
பரக்கழி இதுநீ பூண்டால் புகழையார் பரிக்கற்பாலர்." [அப்பா

— கம்பராமாயணம். வாலி வதைப்படலம்.

சீலமும், தருமமும், சிதைவில்லாத நற்பண்பும் அமைந்த இராமனை பொறாமைக் காரணமாக கைகேயி புறக்கணித்து விட்டாள். அதுவரை அவள் அன்புருவமாகத் தோன்றிய இராமன் பிரிவினையால் வேம்பாக யிருந்தான். இராமன் வனம் போக, பரதன் நாடாளக் கட்டளை பிறந்தது. இதைக்கேட்ட இராமன் அயர்ந்தானில்லை. ஆசையைக் குழிதோண்டி புதைத்து குன்றிலே பரதனை ஏற்றிப்பார்த்தான். அப்போது அவன் முகம்

அன்றலர்ந்த செந்தாமரை போன்று இருந்தது. தன் செம்பவள வாய் திறந்து அன்னைக்கு அன்பு வார்த்தை கூறினன்,

"மன்னவன் பணியன் றாகில் நும்பணி மறுப்பனோஎன்
பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்ற தன்றோ?
என்இதின் உறுதி அப்பால் இப்பணி தலைமேற் கொண்டேன்
மின்னொளிர் கானம் இன்றே போகின்றேன் விடையும் கொண்டேன்."

— கம்பராமாயணம். நகர்நீங்கு படலம்.

இவ்வளவு சகோதர மனப்பான்மையுள்ளவன் மற்றவனையும் இந்நிலையில் நினைக்க வேண்டாமா? அறத்தால், அன்பால் பரதனுக்கு ராசியத்தை அளித்தான். இது நற்கருமம். ஆனல் வாலிக்கோ, துன்பமிட்டு அத்துன்ப வாழ்விலே சுக்ரீவனுக்கு ராசியத்தை அளித்தான். இது தீக்கருமம். நற்குணச் செம்மல் நாட்டிலே ஒரு கருமம் அழகுற, காட்டிலே ஒரு கருமம் இழிவுறச் செய்தது தன்னலமே!

"கூட்டொரு வரையும் வேண்டாக் கொற்றவ பெற்றதாதை
பூட்டிய செல்வம் ஆங்கே தம்பிக்குக் கொடுத்துப் போந்து
**நாட்டொரு கருமம் செய்தாய்** எம்பிக்குஇவ் வரசை நல்கிக்
**காட்டொரு கருமம் செய்தாய்** கருமம் தான் இதன் மேல் உண்டோ."

— கம்பராமாயணம். வாலி வதைப்படலம்.

முறையற்று செய்த இராவணனை முனியாது வாலியை இராமன் அழித்தது அறனன்று. கார் மேகத்தில் உலவும் அம்புலிக்குக் களங்கம் ஒன்று உள்ளது. இது இயற்கை. ஆனல் சூரியன் மரபுக்கு இராமன் அறன் அல்லாத செயலை செய்த காரணத்தினுல் ஒரு களங்கமாகத் திகழ்கிருன்.

யாவராலும் போற்றப்படும் இராமன், அறத்தை அன்புடன் ஆற்றும் இராமன், சிரிய இராமன், சிறந்த இராமன், தன்னல மனத்தால் புனைந்துரையாத் தவறு வாலிக்குச் செய்துவிட்டான்.

"நூல்இ யற்கையும் நும்குலத் தந்தையர்
போல்இ யற்கையும் சீலமும் போற்றலை
வாலி யைப்படுத் தாய்அலை மன்அற
வேலி யைப்படுத் தாய்விறல் வீரனே."

— கம்பராமாயணம் வாலி வதைப்படலம்.

# தேவர் கண்ட திருநாடு

திரு. மது. ச. விமலானந்தம் அவர்கள் எம். ஏ.,
தமிழ் விரிவுரையாளர்,
மன்னர் சரபோசி கல்லூரி, தஞ்சாவூர்.

[முன் மலர் - 11, இதழ் 12-ன் தொடர்ச்சி]

அங்காடிகள் அமைப்பும் 'அழகும்':

அடுத்து அங்காடி வீதிகளின் அமைதி செப்புகின்றார் ஆசிரியர்: ஒவ்வொரு கடையின் முன்பும், பகலில் உயர்த்தி வைத்தற்கும், இரவில் தாழ்த்தி வைத்தற்கும் உரியமுறையில் கம்பலம் வேய்ந்த சட்டங்கள் பொருத்தப் பெற்றிருக்கும்; இக் கம்பலக் கிடுகுகளைத் தாங்கி நிற்கும் கால்களோ மணிகள் பதிக்கப்பெற்று, முத்து மாலைகள் அணியப்பெற்று, பொன்னா லும் பவழத்தாலும் ஆனவையாம்! ஒவ்வொரு கடையிலும் தரையை மெழுகித் தூய்மை செய்து, சந்தனப் புகையும் அகிற் புகையும் இட்டு, மலர் தூவி தெய்வம் பராவி, வெண்கடுகு போன்றவற்றைச் சிதறுவர். இதன் பின்னர்தான் கதவைத் திறந்து அவ்வப் பெட்டிகளிலினின்றும் மணி, முத்து, வயிரம், பவழம், நண்பகலை இரவாகச் செய்யும் சிறப்பினதாய நீலமணி களால் ஆன அணிகலன்களையும் எடுத்துக் கொட்டிக் குவிப்பர்; இங்ஙனம் கொட்டிக் குவிக்கும்போது சில சிதறிக் கீழே விழ வும் கூடுமன்றோ? அவற்றை அவ்வணிகர்கள் எடுக்கமாட்டார் களாம்! அங்ஙனம் எடுப்பதும் இராசமாபுர வணிக ஒழுக்கத் திற்கு ஏற்றதாகாதாம். இதைவிட இன்னும் ஒருபடி மேற் சென்று, அவர்கள் நாளும் நடுதற்குக் கழுகு முதலியன தேட வேண்டுவதில்லையாம்! அவற்றையும் பொன்னாலும் மணியாலும் செய்து வைத்துள்ளனராம்; இதோ கவி கூற்று:

"விழுக்கலஞ் சொரியச் சிந்திவீழ்ந் தவையெடுத்துக் கொள்ள
ஒழுக்கினர், அவர்கள் செல்வம் உரைப்பரி தொழிக வேண்டா

பழுக்குலை கமுகுந் தெங்கும் வாழையும் பசும் பொன்னாலும்
எழிற்பொலி மணியி னாலுங் கடைதொறும் இயற்றி னாரே."

(நகர்வளம் – 37.)

இவையெல்லாம் காணுங்கால், தேவர் கண்ட நாடு திருமகள் திகழும் திருநாடு – திருநிறை நன்னாடு என்றே எண்ணத் தோன்றுகிறது. அத்தகைய செல்வச் சிறப்பு.

## ஆவண வீதிகளில் .... !

இத்தகைய ஆவண வீதிகளை அழகுற மொழிந்த ஆசிரியர், அக்கடை வீதியின் மக்கள் தொகை எத்தகையதெனல் வேண்டாமா? தேனிக்கள் தேன்-கூட்டை எவ்வளவு நெருக்கமாக மொய்க்குமோ, அவ்வளவு நெருக்கமாக மக்கள் சென்று கொண்டிருந்தனராம்! ஒருவர் மார்பிலே பூசிய சந்தனம் எழுவர் மார்பிலும் தோயும்படி அத்துணை நெருக்கமாகக் கடைவீதிகளில் நடந்து கொண்டிருந்தனராம் நகரமாந்தர். இத்துணை மக்களும் கூடிவிட்டால் பின் கடை வீதியின் கூச்சலைக் கேட்க வேண்டுமா? பெருங் கூட்டத்தில் ஒருவர்க்கொருவர் பேசிக் கொள்ள மொத்தத்தில் அனைவர் குரலொலியும் சேர்ந்து ஒரே ஒலிமயமாய் இருக்குமன்றோ? அம்முறையில்தான், ஓசையில் எழுத்து வடிவம் உணரலாகா வகையில் அங்காடி வீதியில் எழுந்த ஒலி கடலொலி போல் அமைந்த தென்கிறார் ஆசிரியர்.

"முசுதேன் இருலின் முச மொய்திரை யியம்பி யாங்கும்
ஓசையென்று உணரின் அல்லால் எழுத்துமெய் யுணர்த லாகாப்
பூசுசாந் தொருவர் பூசிற் றெழுவர் தம் மகலம் பூசி
மாசனம் இடம்பெ றாது வண்கடை மலிந்த தன்றே."

(நகர்வளம் – 38.)

ஆசிரியரின் இம்மொழிகள் அங்காடி வீதியையே நம் அகக்கண்முன் கொணர்ந்து நிறுத்துகின்றதாம்! அங்ஙனம் அமைந்துளது ஆசிரியரின் அழகுச் சொல்லோவியம்.

## பிற வீதிகளின் பாங்கும் பெற்றியும்:

இனி ஏனைய வீதிகளின் ஏற்றம் கூறுகிறார். மெய்யிற் புனைந்து மிஞ்சிய பொற் சுண்ணமும் பிறவும் பனி நீரோடு கலந்து இளகி வீதிகளில் ஒழுகி, அதனோடு மதுவும் மதநீரும்

கலத்தலால் சேருகி வீதி யெங்கும் பரவி இருக்கும்; இச்சேற்றில் அணிகலன்கள் சிலவும் பதிந்து கிடக்கும். இச்சேறு நிறைந்த வீதிகளில் நடக்கும்போது வழுக்கி விழ நேரும், இன்றேல் சேற்றினூடே பதிந்துள்ள அணிகள் காலகளைப் பதம் பார்த்து விடும். இங்ஙனம் அடியிடுதற்காகா வீதிகளின் அமைதியினை நயம்படக் கூறியுள்ளார் நம் தேவர்.

இவ்வீதிகளில் ஒருபால் முரசம் முழங்கும்; கோயில்களிலே இடும் புகையானது மேகமென மேலெழுந்து, ஞாயிற்றை மறைக்குமாம்: தேவர்கட்குப் பலியிடும் அரசர்கள் தத்தம் முடிகள் நெருங்க தேவரை வணங்குங்கால், முடிகள் உராய்த லான் உண்டாகும் சுடர் மேகத்தின் மின்னலைப்போல் ஒருபால் ஒளிரும். இன்னொருபால் ஊடிய மகளிரை நாடி நிற்கும் கணவன் மார்கள் துகில் பற்றி இழுக்கவே, இடையில் அணிந்த மேகலை அறுந்து மணிகள் கீழே சிந்த, சிதறிய வண்ணமணிகள் வான வில் போல் விளங்குமாம்!

கரும்பு தின்னக் கூலியா?

மற்றொருபால் நிகழும் நிகழ்ச்சி நெஞ்சைத்தொடும் நீர்மை யதாய், 'இருந்தோம்பி இல்வாழ்வதுஎல்லாம் விருந்தோம்பி வேளாண்மை செய்தல் பொருட்டு' என்ற வள்ளுவர் வாய் மொழியை - தமிழர்தம் தலையாய பண்பை - விருந்தோம்பும் பண்பை விதந்து கூறுவதாகும். பாட்டைப் பாருங்கள் :

"வளையறுத் தனைய வாலரி அமைபதம்
அளவறு நறுநெயொ டடுகறி யமைதுவை
விளைவமை தயிரொடு மிசைகுவிர் விரையுமின்
உளவணி கலமெனும் உரையின தொருபால்." (நகர் வளம் - 44)

சங்கை நுண்ணிதாக அறுத்தாற் போன்ற வெண்மையான மெல்லிய அரிசியால் ஆக்கிய சோற்றையும், நெய்யால் அட்ட கறியையும், முற்றிய தயிரால் செய்த துவையலையும் உண்ண வாருங்கள் உண்ண வாருங்கள், என உவந்தழைத்து, (அனை வரும் வளதியோடு வாழ்ந்தமையால்) ஒருவரும் வாராது போகவே (கரும்பு தின்னக் கூலி போன்று) உண்பார்க்கு அணிகலன் உளவென உரைக்கின்றனராம். இராசமாபுர மக்கள். இந்நிலையை எண்ணும்போது இதயம் குளிர்கிறோம். இராசமா

புரத்துக்குற்ற இந்நிலை இந்நாட்டிற்கு என்று வருமோ என்று ஏங்குகின்றோம்! அறுசுவை உணவை ஆக்கி வைத்து அழைத்த போதும் உண்ண வருவார் ஒருவருமிலர்! இக்கனவு நனவாகும் நாள் எந்நாளோ?

**மனையா? மனைமாட்சியா?**

அடுத்து அந்நகர மனைகளின் மாண்பையும், மனைமாட்சியையும் கிளத்துகின்றார் காப்பிய ஆசிரியர். மகளிர் பந்தடித்தலின் ஓசைக்கு அஞ்சி வெருவிய அன்னம், விண்ணில் விளங்கும் மதியைத் தன்னை யொத்த இனமென எண்ணிக் கூடப்போய் மாடங்களின் மேல் அம்மதியோடு மேவி, மதி இயங்குந்தோறும் தானும் இயங்கி இருக்குமாம்.

"பாவை யன்னவர் பந்து புடைத்தலிற்
தூவி யன்னம் வெரீஇத்துணை யென்றுபோய்க்
கோவை நித்தில மாடக் குழாமிசை
மேவி வெண்மதி தன்னொடு இருக்குமே." (நகர்வளம்-47)

இம்மனைகளின் மீது நெடுங்கொடி அசையும் நிலை வெங்கதிர்ச் செல்வனை இழுத்து அலுத்த குதிரைகளின் வாட்டம் போக்குவதாக விதந்தோதுகின்றார் ஆசிரியர். சேரிதொறும் அமையும் செல்வத்தியற்கையைச் சிந்தாமணி ஆசிரியர், வீட்டுத்தரையே சாந்து கொண்டு பூசி, பொற் பூவொடு முத்துக்களையும் வைப்பார்கள். புகையைக் கண்டு அஞ்சி ஓடும் தன்மையதாய புறுக்கள் (மனைகளில் வாழும் புறுக்கள்) பொரிக் கறியினது வாசப் புகைக்கும், மகளிர் கூந்தலுக்கு இடும் அகிற் புகைக்கும் ஆற்றாது பொழிலைச் சென்றடைவதாகச் செப்புகின்றார். தேவர் கண்ட திருநாட்டில் எல்லாமே வெள்ளியும் பொன்னுந்தான்! அடுப்புகள் வெள்ளியாலானவை; அவ்வடுப்பில் நறுமணமிக்க நறைக் கொடியையும் புழுகையும் சந்தனத்தையும் விறகாக எறியவிட்டு, பொன்னாலாய கலத்தில் நெய்கொண்டு நல்லமுது ஆக்குவராம். இத்தனையும் செய்த திருநாட்டு மக்களுக்குத் தமித்துண்ண மனம் வராதாம்; விருந்தினரோ கிடைப்பதரிது; எனினும் எவ்வாறேனும் தேடிப் பிடித்து விருந்தினரோடு கூடியிருந்து உண்டு மகிழ்வராம். இதனையும் விஞ்சுகிறது இராசமாபுரத்தின் செழுமை:

"பாளை மென்கமு கின்பழ மெல்லிலை
நீள்வெண் மாடத்து நின்றுகொண் டந்நலார்
ஆளிய மொய்ம்பர்க் களித்தணி சண்பகம்
நான்செய் மாலை நகைமுடிப் பெய்பவே." (நகர்வளம் - 57)

உயர்ந்த மாடத்தே நின்று, கணவன்மாரொடு அளவளாவி மகிழும் மகளிர், அப்படியே பாக்கையும் வெற்றிலையையும் பறித்துத் தம் கணவன்மார்கட்குத் தந்து, அவர்களுடைய சண்பக மாலையை வாங்கிக் காதலயரும் வேட்கையால் கூந்தலிலே சூடுவர்.

### இராசமாபுரமா ? இந்திரலோகமா ?

இராசமாபுரத்தை இந்திரலோகமா என வியக்கின்றார் தேவர்: துகிற் சேக்கையிலே காதலின்பம் மாந்தும் நகர மாந்தர் காதலால் யாமமும் பகலும் அறியாராயினர். அதனால் இரவு பகலில்லா இராசமாபுரம் பொன்னுலகை நிகர்த்தது என்கிறார். முடிபாக இந்நகரின் திறத்திற்கு ஓர் முத்தாய்ப்பு வைக்கின்றார் பாருங்கள்:

"முல்லை யங்குழ லார்முலைச் செல்வமும்
மல்லன் மாநகர்ச் செல்வமும் வார்கழற்
செல்வர் செல்வமுங் காணிய வென்பர்போல்
எல்லி யும்மிமை யாரிமை யாததே." (நகர்வளம் - 59)

இமையவர் கண் இமைப்பதில்லையன்றோ? இதற்குக் காரணம் இதுகாறும் அறியாமலன்றோ இருந்தோம்? அவ்வறியாமையைப் போக்குகின்றார் பாருங்கள் ஆசிரியர்: இராசமாபுரத்தின் போகத்தையும், செல்வத்தையும், வீரத்தையும் விடாமற் காண்பதற்காகவே இமையவர் கண் இமைத்தலில்லையாம்! இமையவரே இமை கொட்டாமல் காணுமளவிற்குச் செல்வச் செழுமை நிறைந்த நகர் இத்திருநகர் என்கிறார் தேவர்.

தேவர் படைத்த திருநாட்டையும், கருவில் திருவெனத் திருநாட்டின் திருநகரையும் கண்ட நாம், திருவுடை மன்னனைக் காணவேண்டாமா? நாட்டைக் கண்ட நாம் நாடாளும் மன்னனையும் நினைத்தல் வேண்டுமன்றோ? எனவே கோயிற் சிறப்பு காண்போம் வாருங்கள்.

---

# "தமிழ்மொழியை உயர்த்துவோம்"

திரு. போ. முத்தரசு அவர்கள், M. A., B. T.,
தமிழ் விரிவுரையாளர் ம. தி. தா. இந்துகாலேஜ்
திருநெல்வேலி — 4

[ ஆசிரிய விருத்தம் ]

1 படித்துணர்ந்த தமிழ்ப்புலவீர் பணிந்தடியேன்
பகர்வதனைப் பரிந்து கேட்பீர்
பிடித்தமுடன் தமிழ்வளர்ச்சி பேணுவிரேல்
பிறநாட்டின் கலைகள் எல்லாம்
வடித்தசெழுந் தமிழ்மொழியில் வகுத்தெழுதி
வழங்கிடுதல் விடுத்து வீணே
இடித்தரைத்த மாவதனை எடுத்துமீண்டும்
இருந்தரைத்துக் குவித்தல் ஏனோ?

2 தெருவெல்லாம் தமிழ்முழக்கம் செழித்தோங்கச்
செயலாற்றத் தூண்டிப் பாடும்
பொருவில்சீர்ப் பாரதியார் வலியுறுத்தும்
பொருளுரையைப் போற்றல் அன்றோ
வருநாளில் தமிழ்வளமும் மொழித்திறனும்
மாளாமல் வாழச் செய்யும்
திருநிறைந்த தமிழ்த்தாயின் புகழ்விளக்கும்
திருத்தொண்டு செய்வ தாகும்.

3 திறமான தமிழ்ப்புலமை பிறநாட்டார்
தெரிவதனுக் கேற்ற வண்ணம்
பிறமொழியில் தமிழ்க்கலையைப் பெயர்த்தெழுதி
அவர்நாட்டில் பரப்பி னோமா?
அறந்தாங்கும் தமிழ்நெறியை அனைத்துலகும்
உணர்வதனுக் காக நாவின்
திறமோங்க ஆங்கிலத்தில் எடுத்துரைக்கும்
தெளிவுடையோர்ப் பயிற்றி னோமா?

4 வீட்டகத்தே நிலவுகின்ற பெருவாழ்வே
வெளியுலகோர் போற்றத் தக்க
நாட்டியல்பும் அரசொழுங்கும் வாணிகமும்
நவையிலாத பேரும் சீரும்
கூட்டுவிக்கும் எனவுணர்ந்த பழந்தமிழர்
குறித்தொழுகிக் காட்டிப் போந்த
பாட்டியலின் அகநெறியும் புறநெறியும்
பலரறியப் பரப்பி னேமா?

5 யாரோடும் பகையின்றி அவரவரை
நட்பாக்கி எல்லா நாடும்
போரோடா நெறிசார்ந்து புகழ்வளர்க்கும்
பொருளியலைப் பொருந்தத் தேற்றும்
ஏரோடும் வள்ளுவர்சொல் எழிலறத்தின்
இன்பநெறி எடுத்துக் காட்டும்
சீரோங்கும் பெருநூல்கள் ஆங்கிலத்தில்
செய்தளிக்கும் சிறப்புற் ரேமா?

6 நின்றொளிரும் காப்பியத்துள் முதல்நிற்கும்
நிலையினதாய் நெஞ்சை அள்ளும்
குன்றாத சிறப்புடைய கோச்சேரர்
குலத்தோன்றல் உளத்தில் பூத்த
பொன்றாத புகழுடைய சிலம்பென்னும்
புதுமலரின் மணத்தை எல்லாம்
நன்றாகப் பிறநாட்டார் நுகர்ந்துவக்க
நன்முறையில் நவிற்றி னேமா?

7 உடல்கரைய உயிர்குழையத் தொண்டர்கதை
உரைத்தஅருள் மொழியின் தேவர்
கடல்கவர்ந்து பொழிகின்ற காரென்ன
இராமகதை மொழிந்த கம்பர்
தொடர்புடைய புலவரெலாம் படைத்தளித்த
தொன்னூலில் தோன்றி நிற்கும்
சுடர்தருநற் கருத்தனைத்தும் ஆங்கிலத்தில்
தொகுத்துணர்த்தி விளக்கி னேமா?

8 மறவாத மனங்கொண்டு மாருத
நெறிபற்றி நெஞ்சம் என்னும்
இறவாத திருமன்றில் எழில்நடனம்
இயற்றியருள் இறைவன் தன்னை
உறவாகக் கொண்டொழுகி உயிரெல்லாம்
உய்திபெற உருகிப் பாடும்
பிறவாத நெறியளித்தோர் பெருமையினைப்
பிறநாட்டார்க் குணர்த்தி னேமா?

9 மெய்ப்பொருளை விழுங்கியொளிர் மெய்யுணர்வின்
வடிவாக விளங்கித் தோன்றிப்
பொய்ப்பொருளை விட்டகன்று புனிதரருள்
விளங்கொளியால் போதம் ஓங்க
எய்ப்பின்றி எப்பொருளும் உணர்ந்துதெளிந்
தவ்வவற்றின் இயல்பை எல்லாம்
கைப்படுமோர் கனியாகக் காட்டினரை
உலகறியக் காட்டி னேமா ?

10 பொல்லாத சாதிமத இனமென்னும்
புலைவெறிகள் நாட்டை நல்லோர்
செல்லாத நெறிசெலுத்தி அலைக்கழிக்கும்
சிறுமையினைத் தீய்த்துப் போக்கிக்
கல்லாரும் கற்றவரும் கருத்தொத்துக்
கடைப்பிடிக்கக் கருணை வள்ளல்
எல்லார்க்கும் பொதுவாக இசைத்தநெறி
எவ்வுலகும் ஏற்றி னேமா?

11 வரலாறும் உளவியலும் வகையமைந்த
மருத்துவமும் வான நூலும்
அரசியலும் பொருளியலும் உயிரியலும்
அளவுபடாப் பூத வேதிப்
பரப்பியலும் அதில்வளரும் பலதொழிலின்
பகுப்பனைத்தும் படித்துத் தேறத்
தரமான தமிழ்நூல்கள் பலவியற்றும்
தனிமுயற்சி தாங்கி னேமா ?

12 இவையெல்லாம் செய்யாமல் எங்கள்தமிழ்
எங்கள்தமிழ் என்றே நாளும்
கவைக்குதவா வெறும்பேச்சால் தமிழ்மொழிக்குக்
கடுகளவின் பயனும் உண்டோ?
அவைகளிலே பலர்தட்ட அழகாக
அணிந்தணிந்து பேசிச் செல்வோர்
சுவைநிரம்பு தமிழ்வளரப் புதுமுறையில்
சூழ்ந்துழைக்கத் துணிதல் என்றே?

13 தாய்மொழியில் உளதாகும் குறைபோக்கத்
தளராத முயற்சி செய்து
வாய்ந்தமைந்த புதுநூல்கள் பலதுறையில்
வகைவகையாய்ப் படைத்தல் அன்றே
சேய்வகையோர் மனங்கொண்டு செயுங்கடமை?
சிறிதேனும் நாணம் இன்றித்
தாய்மொழியைப் பழித்துரைத்துத் தருக்குற்றுத்
தறுதலையாய்த் திரிதல் சால்போ?

14 இமைப்பொழுதில் எழுநூறும் எண்ணூறும்
எனப்பாடும் மரபில் வந்தோம்
நமைக்கண்டு பிறர்நகைக்க மடிந்திருப்பின்
நலமுண்டோ? நாடு வாழ
உமைத்தொழுது வேண்டுகின்றேன் உடன்பழகும்
பிறதுறையின் வன்மை பெற்றோர்
தமைக்கண்டு கலந்துழைத்துப் புதுநூல்கள்
தகுமுறையில் எழுது வோமே!

15 பழந்தமிழின் பெருமையெல்லாம் பலபடவே
பன்னுவதில் பயனே இல்லை
பழமையினைப் பாராட்டிப் புதுவளர்ச்சி
பாராது போது போக்கும்
கிழமையினால் கேடுண்டு பலநலமும்
கிளைத்தோங்கும் சிறப்பு வேண்டில்
உழைப்பாலே பெறலாகும் உறுதிகொண்டு
தமிழ்மொழியை உயர்த்து வோமே!

# கைரேகை

திரு. எ. எஸ். துரை அவர்கள்,
தபால் பெட்டி 344, சென்னை - 2.

---

சோதிடப் பகுதியாகிய கைரேகைச் சாத்திரமும் மனித வாழ்க்கையின் நிகழ்ச்சிகளை நிர்ணயிக்கும் நுண் கலையாகப் போற்றி வளர்க்கப்படுகிறது. அமெரிக்க நாட்டிலும், இங்கிலாந்திலும் கைரேகைச் சாத்திரம் மிகவும் வளர்ந்து வருவதை அந்நாடுகளின் நூற் பதிப்புக்களால் அறிகின்றோம்.

மானிட வாழ்க்கையின் மர்மங்களைத் தெள்ளென விளக்கும் சாலக் கண்ணாடியாகக் கைரேகைச் சாத்திரம் விளங்குகின்றது. மக்கள் எப்பொழுதுமே துன்பத்தை அனுபவிக்கச் சற்றும் விரும்பார்கள்; இன்பத்தையே நாடும் இயல்புடையவர்கள். இன்பமும் துன்பமும் மக்களின் நல்வினை தீவினைகளால் பதிவு ஆகின்றன. அந்தப் பதிவுகளைக் கண்டறிந்து, அதற்குரிய பலனை நுகர மக்களுக்கு வழி காட்டுவதில், கைரேகைச் சாத்திரம் முதன்மையானது.

இன்று விஞ்ஞான உலகில், பஞ்சபூதங்களின் இயக்கங்களைப் பயன்படுத்திப் பல்லாயிர மைல்களின் தூரத்தைச் சில மணித் துளிகளில் கடக்கும் ராக்கெட்டுகளின் விந்தைக் கதைகளைக் கேட்கின்றோம். நீரையும் நெருப்பையும் சண்டையிடச் செய்து நீராவிச் சக்தியைப் பயன் கொள்ளுகின்றோம். காற்றை நெருக்கி (compress) விட்டுக் கனகக் குன்றுகளையும் துளைத்து விடுகின்றோம். மண்ணைப் (cement) பொடித்து விட்டு மாளிகையைக் கட்டுகின்றோம். பூதசக்திக்கே இவ்வளவு பயன் உண்டென்றால், பூதங்களையே ஆட்டுவிக்கும் கிரகங்களை (planets)ப் பற்றி எண்ண வேண்டுமன்றோ!

மக்களது வாழ்விலுள்ள ஏற்றத் தாழ்வு எண்ணுக்கடங்கா. உயிர்கள் தோன்றியதும் உலக பந்தங்களுக்குக் கட்டுப்படு

கின்றன. கிரகங்களின் ஆதிக்கத்திற்கு உட்படுகின்றன. அவற்றின் இயக்கத்திற்குத் தக்கவாறு வினையாற்றுகின்றன. அந்த வினைச்சுவடுகளே மனதில் பாய்ந்து கையில் படிகின்றன.

பேசும் படச்சுருளில் ஒலிப்பதிவின் சுவடுகளைக் (Sound Tracks) காண்கின்றோம். அந்த ஒலிச் சுவடுகள் வெற்றுக் கோடுகளாக நமக்குத் தோன்றுகின்றன. அதை இயந்திரத்தில் பூட்டி ஒளியைப் பாய்ச்சி விட்டால் கோடுகள் பேசும் ஒலியைக் கேட்கின்றோம். உதாரணத்துடன் விளக்குவோமானால், ஒரு பேசும் படம் அமெரிக்க நாட்டில் 1950-ல் ஒலிப்பதிவு செய்வ தாக வைத்துக் கொள்ளுவோம். அப்படம் கடல் கடந்து, ஆண்டுகள் பல கடந்து, நாடுகள் பல கடந்து நமது நாட் டிற்கு 1960-ல் வருவதாக வைத்துக் கொள்ளுவோம். பத்து ஆண்டுகள் யாத்திரை செய்த அப்படத்தின் ஒலிச்சுவடு எதைப் பற்றிப் பேசமுடியும்? அப்படம் எடுக்கப்பட்ட 1950-ல் எந்த நிகழ்ச்சி பேசப்பட்டதோ அதையே 1960-ல் பேசுகின்றது.

அதுபோலவே மக்கள், பிறவி யாத்திரையில் எத்தனை கடல்களைக் கடந்தாலும், எத்தனை ஆண்டுகளைக் கடந்தாலும், எத்தனை நாடுகளைக் கடந்தாலும் இரேகைச் சுவடுகள், அவர்கள் காலத்தில் செய்த வினையின் பயனை விளக்கும் கோடுகளா கின்றன என்பது சிந்தனைக் குரியதாகும்.

எவ்வாறு ஒலிக் குறிப்புகள் நிழற் கோடுகளாக்கப்பட்டு, அந்நிழற் கோடுகள் ஒலிக் குறிப்பாக மாறும் சக்தி பெறு கின்றனவோ, அதுபோலவே மக்களது வினைக் குறிப்புகள் இரேகைக் குறிப்புகளாக மாற, அக்குறிப்புகளால் வினையின் பயனை நிர்ணயிக்கப் பயன்படுகின்றன.

வினையின் பயனை ஆராய்வதால் மக்களுக்கு நன்மை உண்டா என்பது மக்களின் அடுத்த பிரச்சனையாகும். வரு கின்ற நன்மையைப் பயன் கொள்ளுவதற்கு மட்டும் இக்கலை பயன்படவில்லை; வரப்போகும் தீமையைத் தடுத்து எச்சரிக்கை யுடன் வாழ்வதற்கும் இக்கலை வழிகாட்டுகின்றது.

கிரகங்களின் ஆதிக்கத்திற்குத் தக்கவாறு மக்கள் வினை யாற்றுகின்றனர். அந்த வினை முளைத்துச் செடியாகவோ,

கொடியாகவோ, மரமாகவோ வளர்ந்து விளைவு தருகின்றது. அவ் விளைவு நன்மையாகவோ தீமையாகவோ அமையக்கூடும். மக்கள் என்னவோ நன்மையை நாடித்தான் வினையாற்றினுர் கள்; ஆனுல் அதன் விளைவு தீமையாக முடிவதேன் ?

கணித வகுப்பில் மாணவர்கள் கணக்குச் செய்யும் பொழுது விடை சரியாக வராவிட்டால் புத்தகத்தின் கடைசி பக்கத்தைத் திருப்பிப் பார்க்கின்றனர். விடையை வைத்துக் கொண்டு திரும்பவும் கணக்குச் செய்து வினுவிற்கு வந்து விடுவதைக் காண்கின்ருேம். சிந்திக்கும் மாணவர்கள் செய்த வழியை அலசிப் பார்த்து, கூட்டல், கழித்தல், அல்லது பெருக்கல், வகுத்தலால், செய்த பிழையைத் திருத்திக் கொண்டு தேர்வு பெறுகின்ருர்கள்.

அது போலவே மக்கள் வாழ்வு வகுப்பில் வினைகளைச் செய்யும் பொழுது விளைவு சரியாக வராவிட்டால் கையின் கோடுகளைத் திருப்பிப் பார்க்கின்றனர். விடையை வைத்துக் கொண்டுத் திரும்பவும் செயலாற்றி விளைவைப் பெறுகின்றனர். சிந்திக்கும் மக்கள் தமக்கு நேர்ந்த விளைவுகளால் வினையின் கணக்கு எங்கு தப்பி இருக்கிறது, எந்தக் கிரகங்களின் ஆதிக் கத்தால் தவறிழைத்தோ மென்று புரிந்து கொண்டு வாழ்வில் தேர்வு பெற முயற்சி செய்கின்றனர்.

இம் முயற்சிக்குத் தெள்ளிய முறையில் வரையறுக்கப்பட்ட சாத்திரங்களில் கைரேகைச் சாத்திரமும் ஒன்ருகும். வினைக்கு ஈடாக நேரிடப் போகும் செயல்களை இக்கலை எடுத்துச் சொல்லு கின்றது. சிலர் அறியாமலும், பலர் அறிந்தும் செயலாற்று கின்றனர். தவிர்க்கப்பட்ட செயல்களையும் தாராளமாய்ச் செய் கின்றனர்.

மறைவாக ஒரு சக்தி நமது மனதில் நின்று செயல்களைப் பதிவு செய்கின்றது என்பதைப் பலர் மறந்து விடுகின்றனர். ஆனுல் கைரேகை அவர்களது செயல்களைப் பதிவு செய்வதை மறந்துவிட வில்லை. அந்தப் பதிவுகளே அவர்களது வாழ்வை நிர்ணயிக்கப் பெரிதும் உதவுகின்றன.

பண்பட்ட மனிதன் பதிவுகளைக் கண்டாராய்ந்து, சென்ற கால நிகழ்ச்சிகளைப் பொருத்தித் தனது நல்வினை தீவினைகளை

உணருகின்றான்; தீவினைக்கு வளம் தந்த கிரகங்களின் ஆதிக்கத்தை எண்ணுகின்றான்; வருங்காலத்தில் அவை எவ்வளவு தீங்கிழைக்கும் என்று அளவிடுகின்றான். அத்தீங்குகளைத் தடுக்க முயலுகின்றான். மலர் மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார் நிலமிசை நீடு வாழ்கின்றார்.

அவனருளால் அவன் தாள் வணங்கக் கிரகங்களின் ஆதிக்கப்பலம் குன்றி விடுகின்றது. விஞ்ஞானிகள் மார்க்கண்டேயரை எண்ணிப் பாருங்கள். காலனின் ஆதிக்கம் என்ன வாயிற்று? அரனடிக்குத் தலை வணங்கியது.

சூரியனின் வெப்பம் 115 டிகிரிக்கு வந்தால் மனிதன் தாக்கப்படுகின்றான். அவனால் வெப்பத்தை எதிர்க்க முடியவில்லை. ஆனால் அந்த வெப்பத்தைத் தடுத்து மனிதனுக்கு நிழலைத்தரும் ஆற்றல் ஒரு குடைக்கு இருக்கிறது. மனிதன் தினசரி வாழ்க்கையில் இதைக் காணுகின்றான். ஆனால் கிரகங்களில் கருப்பு நிறமுடைய சனிபகவானுக்குச் சூரியனை எதிர்க்கும் ஆற்றல் உண்டு என்பதையும், அந்தக் கிரகங்களின் பகை உணர்ச்சியாற்றான் தனக்கு நிழல் கிடைத்தது என்னும் மெய்யறிவிற்கு வருகின்றானில்லை; வருகின்றவன் மார்க்கண்டேயன் ஆகின்றான். விதிப்பயனை மாற்றுவதற்குச் சக்தி வாய்ந்தது கடவுட்துணை என்பதை நவயுகக் கவி டென்னிசன் இலக்கியங்களில் காணலாம்.

——

# அமுது செய்வித்தல்

திரு. T. H. விவேகானந்தம் பிள்ளை அவர்கள்,
அசிஸ்டெண்ட் கமிஷனர், இந்து அறநிலைய இலாகா, சென்னை.

[மலர் 12, இதழ் 1-ன் தொடர்ச்சி]

இந் நிகழ்ச்சிகளைக் கண்டு, கிலேசமுற்ற, சிவகோசரியர் கனவில் இறைவன் தோன்றி, "வேடன் நம்பால் செலுத்தும் பேரன்பினை நாளைக்குக் காட்டுவோம். முனிவர்கள் கூறும் வழி பாடுகளும், மந்திரங்களும், அவ்வேடன் அன்புகொண்டு கூறும் வார்த்தைகளுக்கு ஈடாக, நம்மிடத்தில் வந்து ஒளிந்திருந்து காண்பாயாக! மனக்கவலை ஒழிக" என்றருளிச்செய்து மறைந் தருளினர்.

"அவனுடைய வடிவெல்லாம் நம்பக்கல் அன்பென்றும்
அவனுடைய அறிவெல்லாம் நமையறியும் அறிவென்றும்
அவனுடைய செயலெல்லாம் நமக்கினியவாம் என்றும்
அவனுடையநிலை இவ்வாறறிநீ"

என்றருள்செய்தார். திண்ணனர், ஆரும்நாள் வைகறையில், இறைச்சியையும், திருமஞ்சன நீரையும், மலர்களையும், முன் போல அமைத்துக்கொண்டு மலைக்குப் புறப்பட்டார். வழியில் பல தீய சகுனங்கள் கண்டார். "எம்பெருமானுக்கு நான் இல்லாத காலத்து என்ன தீங்கு நிகழ்ந்ததோ" என்று வருந்திய வாறு வந்துகொண்டிருந்தார்.

திருக்காளத்திநாதர் திண்ணனரின் அன்பு முழுவதையும் சிவகோசரியார்க்குக் காட்டும்பொருட்டு, தமது சிவலிங்கத் திரு மேனியில் முகம் ஒன்றும் அதில் கண்கள் மூன்றும் காட்டி, வலது கண்ணிலிருந்து இரத்தம் சொரியும்படி காட்டிக்கொண் டிருந்தார். சிவபெருமான் கண்ணிலிருந்து வழிந்த இரத்தத்தைப் பார்த்து மதிமயங்கினர்.பதைபதைத்துக் கீழே விழுந்தார். பிறகு

மயக்கந் தெளிந்து, பற்பல வகையில் அலமோதினர். கதறி அழுதார். பச்சிலேகளையும் மூலிகைகளையும் தேடிப் பறித்துக் கொணர்ந்து, உதிரம் ஒழுகும் திருக்கண்ணில் பிழிந்தார். பெருகிவந்த உதிரம் சிறிதும் நிற்கவில்லே. "ஊனுக்கு, ஊனே உற்றநோய் தீர்ப்பது" என்னும் பழமொழி அவருடைய நினே வுக்கு வந்தது. (Law of Retaliation – eye for eye, tooth for tooth).

"எம்பிரானுடைய கண்ணுக்குண்டான நோயைத் தீர்ப்பதற்கு என்னுடைய கண்ணை அம்பிஞல் தோண்டி உதிரம் விழும் கண்ணில் அப்பிஞல் இரத்தம் நின்றுவிடும்" என்று கருதினர். உடனே மகிழ்ச்சியுடன் தன்வலது கண்ணைக் கூரிய அம்பிஞல் தோண்டி காளத்திநாதரின் கண்ணில் அப்பினர். கண்ணில் ஒழுகிக்கொண்டிருந்த இரத்தம் நின்றது கண்டார். மகிழ்ந்தார். குதித்தார் கூத்தாடினர்.

திண்ணனுருடையு பேரன்பின் பெருக்கை, ஒளிந்துகொண் டிருந்த சிவகோசரியாருக்கு மேலும் காட்டத் திருவுளங்கொண்ட காளத்திநாதன், தன் இடது கண்ணிலிருந்தும் இரத்தம் பெருகச் செய்தார். திண்ணனர் கண்டார். கைகண்ட மருந்தைக் கண்டு கொண்டதினல், "இதற்கு நான் அஞ்சேன். எனக்கு இன்னும் ஒரு கண் இருக்கிறது. அதனைத் தோண்டி அப்பி, இந் நோயினைத் தீர்ப்பேன்" என்று துணிந்தார். தம் கண்ணைத் தோண்டி எம்பெருமானின் உதிரம் ஒழுகும் கண்ணில் அப்பு வதற்கு அடையாளம் கண்டு பிடிப்பதன் பொருட்டு, ஆண்டவ னது கண்ணின்மேல் தம் இடதுகாலே (செருப்புக்காலே) ஊன்றி, முழுமனதுடன் தன் இடது கண்ணைத் தோண்ட முயன்ருர். "தரித்திலர் தேவதேவர்." செங்கண் வெள்விடையின்பாகர், தம் திருக்கையை வெளியே நீட்டி, அன்பிஞல் தம் இடக்கண்ணை யும் தோண்டும் திண்ணனரின் கைகளைத் தடுத்து, "கண்ணப்ப நிற்க." "என் வலத்தில் மாறிலாய் நிற்க" என அருள்புரிந்தார்.

"பொருட்பற்றிச் செய்கின்ற பூசனைகள்போல் விளங்கச்
செருப்புற்ற சீரடி வாய்கலசம் ஊனமுதம்
விருப்புற்று வேடனர் சேடறிய மெய்குளிர்ந்தாய்
கருட்பெற்று நின்றவா தோணுேக்கம் ஆடாமோ!" - திருவாசகம்.

"கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை"யை வாதவூரடிகளும் [கண்டுகொண்டாரல்லவா?

"நாளாறிற் றெண்டாற்றி கண்ணிழந்து அப்பவல்லேனல்லன்"

"கலைமலிந்த சீர்நம்பி **கண்ணப்பர்க்கடியேன்.**"

**சண்டேசுர நாயனர் :-**

திருச்சேய்ஞலூரில் உதித்த விசாரசருமர் என்னும் அந்தணச் சிறுவர், சிவபெருமான் திருவடியில் மூழ்கித் திளைத்து நின்ருர். ஒருநாள் அவர் தெருவழியே செல்லும்போது ஒரு காட்சியைக் கண்டார். கன்றையீன்ற பசுவொன்று, மேய்ப்போனைக் கொம் பால் முட்டியது. அதனை அவன், தடிகொண்டு தாக்கினுன். கண்ட அந்தணச் சிறுவர் திடுக்கிட்டு, அவனைத் தடுத்து, அறிவும் புகட்டினுர்.

"பசுக்கள் எல்லாம் உயிரினும் மேம்பட்டவை. அவற்றின் பால் இறைவன் திருமுடியிலே ஆட்டப்பயன்பெறும். அவைகளி டமிருந்தே திருநீற்றுக்குரிய சாணங்கள் கிடைக்கின்றன. செங் கண் ஏற்றரும், உமாதேவியாரும், எழுந்தருளும் இடபதேவரின் குலத்தைச்சேர்ந்தன" என்று இன்னபலவும் நினைத்தார். இத் தகைய பெருமைவாய்ந்த பசுக்களை காத்துவருவதே, இறைபணி என்று துணிந்தார். ஆயனை நோக்கி, "நீ இப்பசு நிரையை இனி மேய்க்குந் தொழிலைவிடுக. நானே அவற்றை மேய்ப்பேன்." என்று கூறினுர். இடையனும், இணங்கினுன். அதுமுதல் விசார சருமரும், பசுக்களை மேய்த்து வந்தார். பசுக்கூட்டங்கள், நன்கு பாதுகாக்கப்பட்டு வந்தமையால்,அழகோடு விளங்கின.நிறையப் பாலையும் சொரிந்தன. விசாரசருமரைக் கண்டு அவர் பக்கத்திற் சென்று, அன்பின்மிகுதியால் மடி சுரந்து கறவாமலே பாலினைப் பொழிந்தன. இதனைக்கண்ட விசாரசருமர், மண்ணியாற்றங்கரை யில், மணலால் ஒரு லிங்கத்தை அமைத்தார். பசுக்களும் குடங்கள் நிறையப் பாலைப் பொழிந்தன. இவரும் இந்த லிங்க மூர்த்திக்கு பாலினுல் அபிஷேகம் செய்தார். இது தினசரி நிகழ்ச்சியாயிற்று. இவ்வாறு இறைவருக்குக் குடங்குடமாக பாலைக்கொடுத்து வந்த பசுக்கள் வீட்டுக்குச் சென்றும், முன் போலவே குறைவின்றி பாலைச் சுரந்து வந்தன. எனினும், பாலை வீணுக்குவதாக, பழிச் சொல் ஏற்பட்டது. அவ்வூரார்களும்,

விசாரசருமரின் தாதையாகிய எச்சதத்தனிடம் முறையிட அவனும், தன்மகனின் செய்கையை மறைந்திருந்து பார்த்தான். "ஐந்து பேறறிவும் கண்களே கொள்ள" என்பதற்கிணங்க, சிவலிங்கத்தினிடம் மனதை ஒரு முகப்படுத்தி விசாரசருமன் பாற்குடங்களையெடுத்து திருமஞ்சனம் ஆட்டினுர். மகனுரின் செயலைக்கண்ட எச்சதத்தன், கையிலிருந்த கோலினுல் விசார சருமனின் முதுகில் அடித்தான். கொடிய மொழிகளைக் கூறிக் கடிந்தான். விசாரசருமரின் உடலும் உள்ளமும் பூசைபுரிவதில் இரண்டறக்கலந்து நின்றதால், அவர் அடியையும், வைதலையும் உணராது பூசையில் ஆழ்ந்திருந்தார். பலமுறை அடித்தும், அவற்றை உணராது பால் அபிஷேகம் செய்வதிலேயே ஈடுபட் டிருந்தார் விசாரசருமர். இவருடைய தந்தையர் மேலுங் கோபங் கொண்டு பாற்குடங்களைக் காலினுல் இடறிச்சிந்தினுர். வழி பாட்டுக்குரிய பால் குடத்திற்கேதோ இடையூறு ஏற்பட்டது என்பதைமட்டும் புரிந்து கொண்டார். பக்கத்தில் கையைவைத் தார். கோல் மழுவாகமாறியது. அதை யெடுத்தெறிந்தார். சிவதண்டஞ் செய்தவன் இருகால்களையும் வெட்டியது. எச்சதத் தன் விழ்ந்தான். அந்த நிலையையும் அறியாது வழிபாட்டில் ஈடுபட்டார்.

அப்போது வான வெளியிலே பேரொளியொன்று தோன் றியது. இவரது பூசனைக்கு மகிழ்ந்து சிவபெருமான் உமாதேவி யாருடன் காட்சி கொடுத்து, விசாரசருமரைத் திருத்தொண்டர் களுக்கெல்லாம் தலைவராக்கி "நாம் உண்டபரிகலமும், உடுக்கும் உடைகளும், சூடும் மாலை அணிகலன் முதலியனவும், ஆகிய அனைத்தும் உனக்கே உரிமையாகும்படி சண்டீசன் ஆகும் பதவியையும் தந்தோம்" என்று கூறி வாழ்த்தினுர்.

"மெய்ம்மையே திருமேனிவழிபடாநிற்க
வெகுண்டெழுந்ததாதைதாள் மழுவினுல் எறிந்த
அம்மையான் அடிச்சண்டிப் பெருமானுக்கடியேன்"

அண்டர்பிரான் அடியவர்கட்கமுது செய்தருளிய பெருமை:-

1 திருநாவுக்கரசுநாயனுர் பொதிசோறு பெறுதல்:- திருநாவுக் கரசர் ஒரு சமயம், திருப்பைஞ்ஞிலிக்குச் செல்லும் வழியிலே பசியினுலும் தாகத்தினுலும் மிகவருந்தினுர். திருப்பைஞ்ஞிலி

ஈசன் தமது தொண்டருடைய வருத்தத்தைப் போக்க, அவர் வரும் வழியில், ஒரு சோலையையும் குளத்தையும் உண்டாக்கி, திருநீறணிந்த அந்தணர் கோலத்தில் பொதிசோறு சுமந்து, திருநாவுக்கரசர் வரும் வழியில் வீற்றிருந்தார்.

ஆளுடைய அரசு தனக்கெதிரே வந்தவுடன், சிவபெருமானுகிய அந்தணர் அவரை நோக்கி "நீர் வெகுதூரம் நடந்து வந்து மிக களைத்துப் போனீர். என்னிடம் பொதிசோறு இருக்கிறது. அதனை உண்டு, இக்குளத்து நீரைப் பருகி இளைப்பாருவீராக" எனப் பரிவுடன் கூறினுர். பசியின் கொடுமையால் வாய் பேசாமல், பரமனுர் அளித்த பொதிசோற்றை உண்டு, நீர் அருந்தி தனக்கு ஏற்பட்ட களைப்பைப் போக்கிக் கொண்டார். பிறகு இருவரும் இனிது பேசிக்கொண்டே திருப்பைஞ்ஞிலியை நோக்கிச் சென்றனர். ஊரை நெருங்கியவுடன், வேதியர் வேடத்திலிருந்த சிவபெருமான் மறைந்தருளினுர். வாக்கின் மன்னரும் திருவருளைப் புரிந்து கொண்டார்.

**சுந்தரர்:- குண்டையூர் நெல்:-**

குண்டையூர் கிழாரென்பவர் சுந்தரரிடம் பேரன்புடையவர். இவருக்கு வேண்டிய நெல்லையும், கறிகாய் முதலியனவற்றையும் பரவையார் திருமாளிகைக்குக் கொடுத்து வருவது வழக்கம். இந்நிலையில் கொடியவற்கடம் உண்டாயிற்று. பரவையாருக்கு நெல் கொடுக்க இயலவில்லையே என்று குண்டையூர் கிழார் வருந்தினுர். அவ்விரவிற் கனவிலே கண்ணுதலார் தோன்றி, "ஆரூரனுக்குக் கொடுக்கவேண்டிய நெல்லளித்தோம்" என்றருளினுர். விடியற்காலையிலே நெல் மலையைக் கண்டு திகைப்புற்ருர்! இந்த நெற்குவியலை ஆரூரனிடம் எப்படிக் கொண்டு சேர்ப்பது என்று ஏங்கினுர். நெல் கிடைத்த வியப்பினை சுந்தரரிடம் விளம்பினுர். சுந்தரரும், நெல் மலைபைக்காண குண்டையூர் சென்ருர். வழியிலுள்ள திருக்கோளிலி (திருக்குவளை) இறைவனை வணங்கி கீழ்க்கண்டவாறு விண்ணப்பித்தார்.

"நீளநினைந்தடியேன் உமைநித்தலும் கைதொழுவேன்
வாளனகண் மடவாள் அவள் வாடிவருந்தாமே
கோளிலி யெம்பெருமான் குண்டையூர்ச் சிலநெல்லுப் பெற்
ஆளிலை எம்பெருமான் அவைஅட்டித் தரப்பணியே." [றேன்

பகல் கழிந்தவுடன் பரவையின் மனைமட்டுமின்றித் திருவாரூர் நிறைய நெல்லைக் கொண்டுவந்து, சிவபெருமானருளால் பூதங்கள் சேர்த்தன.

### சுந்தரருக்கு சிவபெருமான் பொதிசோறு தாங்கி வந்து அளித்தது:-

வன்றொண்டர் திருக்குருகாவூருக்குச் செல்லுகையில், பசியினாலும் தாகத்தினாலும் களைப்புற்றார். அந்நிலை அறிந்த ஆண்டவர் வெம்மை தவிர்க்க, குளிர்ந்த பந்தலொன்றை அமைத்தார். தாம் ஒரு அந்தணரானார். தண்ணீரும், பொதிசோறும் வைத்துக்கொண்டு வன்றொண்டரை எதிர்நோக்கியிருந்தார். களைத்து வந்த சுந்தரர், அடியாருடன் அப்பந்தலில் தங்கினார். அந்தணர் வடிவில் வந்த அண்டர்பிரான் வேண்டுகோட்படி, அவர்கொடுத்த கட்டமுதைப் பெற்றுத்தாமும், தம்முடன் வந்த அடியார்களும், உண்டு இளைப்பாறினார்கள். களைதீர்ந்து விழித்துப் பார்க்கும்போது தண்ணீர்பந்தரும், உபசரித்த அந்தணரும் மறைந்தருளியதைக்கண்டு, திருவருளின் திருவிளையாடலை எண்ணி, எண்ணி இருமாந்திருந்தார்.

### இரந்து அளித்த சோறு:-

ஒரு சமயம் சுந்தரர் திருக்கழுக்குன்ற அண்ணலைப் பாடி, வணங்கி, வெளிப்போந்து திருக்கச்சூர் அடைந்தார். அங்குள்ள இறைவனைப் பரவி வெளிவந்தார். பசி கண்ணை அடைத்துவிட்டது. சுந்தரர் நிலையை அறிந்த அண்ணலார் அந்தணராகி வந்து, சுந்தரரை அங்கேயே இருக்கச் செய்து, நண்பகலிலே கொடிய வெயிலிலே தம் திருவடியால் நடந்து சென்று, தன் தோழனுக்காக விடுதோறும் இரந்தார். உணவு பெற்றார். சுந்தரரும், தன் அடியருடன் உண்டு பசி தணிந்தார். பிறகு பார்க்கும்போது உணவளித்த அந்தணரைக் காணவில்லை. உண்மை உணர்ந்தார் நம்பியாரூரர். என்னே! அடியார்களிடம் ஆண்டவன் கொண்டுள்ள பற்று! பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப்பரிவுடையவனல்லவா, நம் ஆண்டவன்.

### மங்கையர்க்கரசி மாதேவன் அடியார்களைப் பேணியமாண்பு:

"அகரமோ ருநூருயிரஞ்செய்து வேள்விபயி
லந்தணர்க்கீவ தனினும்

ஆலயஞ்சிகர முளவாக வொருநூறு
யிரஞ்செய்வதனினும் அரனுர்
நிகரறுபொனடி மலர்களகமலரில் வைத்தேத்து
நியதிதவருத தொண்டர்
நீள் பசிக்கொருவேளையுணவு தருவதனுக்கு
நிகரில்லை என்பதோர்ந்து
புகரறுமெய் யன்பர்வர, எதிர்கொண்டழைத்து அடிகள்
போற்றிஉணவு ஆடைஅணிகள்
போதுமென வுதவியிவணீயிர் வரஎமதுகுடி
புண்ணியம் பண்ணியதெனப்
பகரழகு மிகுநறவு பொழிகுமுதமலரனைய
பனிவாயின் முத்தமருளே
பங்கயத்திருவின் உயர் மங்கையர்க்கரசியொளிர்
பவளவாய் முத்தமருளே. "

மங்கையர்க்கரசியார் பிள்ளைத்தமிழ் : முத்தப்பருவம்.

குறள் :

" இருந்தோம்பி இல்வாழ்வதெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு."
" இனைத்துணைத் தென்பதொன்றில்லை விருந்தின்
துணைத்துணை வேள்விப்பயன். "
" அற்ருர் அழிபசிதீர்த்தல் அஃதொருவன்
பெற்ருன் பொருள்வைப்புழி."

உலகநீதி : தருமத்தை யொருநாளும் மறக்கவேண்டாம்.

கொன்றை வேந்தன் :

(1) "மருந்தேயாயினும் விருந்தோடுண். "
(2) விருந்திலோர்க்கில்லை பொருந்திய ஒழுக்கம்.

ஆத்திச்சூடி : ஐய மிட்டுண்.

---

# பத்தினிப் பெண்டிரும் பார் வேந்தன் மனைவியரும்

திரு. செ. சங்கரன் அவர்கள்,
நூலக அலுவலர், சரபோசி மன்னர் கல்லூரி, தஞ்சை.

ஐம்பெரும் காப்பியங்கள் என தமிழில் போற்றப்பெறும் ஐந்து காப்பியங்களில் தொன்மைச் சிறப்புடையது சிலப்பதி காரம். அரசியல், அறம், ஊழ்வினைச் சிறப்பு, மற்றும் கற்புடை மகளிரின் பெருமை ஆகிய மூன்றும் இந்நூலின் மிகவும் சிறப் புள்ள மேம்பாடான கொள்கைகளாகும். சொற் சுவையிலும், நல்பொருட் சுவையிலும் சிறந்து விளங்குவது சிலப்பதிகாரம். "நெஞ்சை யள்ளும் சிலப்பதிகாரம்" என்றார் நம் பாரதியார். இலக்கிய உலகிலேயே உள்ள வரலாற்றுக் காப்பியங்களில் சிறந்தது சிலப்பதிகாரந்தான். சிலப்பதிகாரம் தமிழ்ப் பெண் களின் பெருமையையும், கற்பின் உயர்வைப்பற்றியும், தெள் ளென விளக்குகிறது. இந்நூல் தமிழகத்தின் வளம், தமிழரின் ஒன்று கலந்து வாழும் பண்பு, தமிழரின் நாகரீக வாழ்வு முதலியவற்றையும் நன்கு விளக்குகிறது. குறிப்பாக தமிழ்ப் பெண்டிரின் குண நலன்களையும், கற்பின் திறத்தையும் தெள் ளென விளக்குகிறது; இதனை இளங்கோவடிகள் கண்ணகி, மாதவி, மாதரி, கோப்பெருந்தேவி, வேண்மாள், ஆகியோரை படைக்கும் முறையால் அறியலாம். இனிஅறிய முற்படுவோமாக.

**கண்ணகி:**

மாநாய்க்கன் என்னும் வணிகனின் புதல்வி. அழகிலும் பண்பிலும் சிறந்தவள் கண்ணகி. இதனை இளங்கோவடிகள்,

"போதில் ஆர் திருவினள் புகழ்உடை வடிவு என்றும்
தீது இலா வடமீனின் திறம் இவள் திறம் என்றும்
மாதரார் தொழுது ஏத்த வயங்கிய பெருங்குணத்துக்
காதலாள்."

என்று மிகவும் சிறப்பாகக் கூறினார். மற்றும் இவளைக் கோவலன்.

"மாசறு பொன்னே வலம்புரி முத்தே
காசறு விரையே கரும்பே தேனே
அரும்பெறல் பாவாய் ஆருயிர் மருந்தே
பெருங்குடி வணிகன் பெருமட மகளே
மலையிடைப் பிறவா மணியே என்கோ
யாழிடைப் பிறவா இசையே என்கோ"

என்றும் கூறினான்.

கண்ணகி உண்மையும் தூய்மையும் கொண்டு கணவன் கோவலனை வழிபட்டாள். கணவனுடனும் கண்ணகி,

"இருந்தோம்பி இல்வாழ்வதெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மைச் செய்தற் பொருட்டு."

என்ற வள்ளுவர் வாக்கிற் கிணங்க, இல்லறத்தைச் செம்மையாக நடத்தி வந்தாள். சில ஆண்டுகள் கடந்த பிறகு அவள் கணவன் மாதவியை நாடியபோதும் கணவனின் மேல் சீற்றம் கொள்ளாமல், மதி இழந்த வானம்போலும், தாமரை இல்லாத தடாகம் போலும், வனப்பிழந்து சோகத்தில் மூழ்கினாள். அவளுடைய மதிபோன்ற முகம் வாடியது. மங்கல அணியைத் தவிர மற்ற அணிகளை மறந்தாள். தன்னுடைய துயரத்தை மற்ற எவருக்கும் வெளிக்காட்டாமல் இருந்தாள். கோவலன் மாதவியை விடுத்துவிட்டு கண்ணகிபால் திரும்பிய போதும் கண்ணகி தன் கணவன் கையில் பொருள் இல்லாததால் தன்னை நாடுகின்றனன் என எண்ணி "என்னிடத்தில் இன்னும் இரண்டு காற்சிலம்புகள் இருக்கின்றன" என்று தெளிந்த மனத்துடனும் கணவன் பால் சிறிதும் அன்பு குன்றாமல் கொடுத்தாள் என்பதை இளங்கோவடிகள்,

"நலங்கேள் முறுவல் நகைமுகங் காட்டிச்
சிலம்புள கொண்மெனச்" சொன்னாள்.

என்று விளக்குகிறார். கோவலன் கண்ணகியை மதுரைக்கு அழைத்தபோதும் கண்ணகி கோவலனை ஒன்றுங் கேட்காமல்

கோவலனுடன் போனது கண்ணகியின் கற்பின் திறம்நன்ருக விளங்குகிறது. கவுந்தியடிகளும் கண்ணகியின் கற்பின் திறத்தைப்பாராட்டி,

"கற்புக் கடம் பூண்ட இத்தெய்வ மல்லது
பொற்புடைத் தெய்வம் யாம்கண்டிலமால்."

என்ருர். கரையை அடித்துக்கொண்டு ஓடும் காட்டாறு எந் நாளும் அப்படியே இருந்ததில்லை. அதைப்போல கண்ணகி கோவலனை நினைத்து அவன் எப்படியாவது மனம் திருந்துவான் என பொறுமையுடன் இருந்தாள். பிறகு தன்னுடைய கணவன் கொல்லப்பட்டான் என அறிந்ததும் தன்னுடைய கற்பின் திறத்தால் அந்த மதுரை மாநகரைத் தீய்க்கு இரை ஆக்கினுள் கற்பின் தெய்வம் கண்ணகி. கண்ணகியின் கற்பு அறக்கற்பி னின்று மறக்கற்பாக மாறியது.

மாதவி :

இவள் சித்திராபதியின் மகள். தலைசிறந்த கலைமரபிலே பிறந்தவள். பழைய மாதவியான ஊர்வசியின் மரபில் வந்தவள். தாது அவிழ்கின்ற மலர்கள் சூடிய கடை சுழன்ற கூந்தலையும் உடையவள். இவள் கூத்தும், பாடலும்,ஒப்பனையும் என்று நாடக மகளிர்க்கு உரியவனவாக சொல்லப்பட்ட மூன்றில், ஒன்றிலும் குறைவு படாமல் ஏழாண்டுகாலம் பயிற்றுவிக்கப் பட்டாள். பிறப்பிலும், பிறப்புக்கேற்ற சிறப்பிலும் குன்ருத பூங்குழற் பாவை. தனது பன்னிரண்டாம் வயதில் ஆடல், பாடல், அழகு இம்மூன்றிலும் நிறைவுற்று விளங்கினுள் மாதவி. இளமை, அழகு, அகன்ற விழிகள், பெருத்தமார்பு, வசீகரிக்கும் தன்மை, முகமலர்ச்சி, கீதம், வாத்தியம், தாளம், ஆகிய ஒன்பதையும் ஒரு சேர அமையப்பெற்றவள். கலைவிருப்பமும், நற்குணமும், நல்ல அழகும், ஆடலும்,பாடலும் ஒருங்கே வாய்ந்த அணங்கு அவள். மாதவிதன் உள்ளத்தில் குடிகொண்ட கோவலனையே தன் கணவனுகக் கொண்டாள். விலைமாதர் மரபில் அவள் வந்தாலும், தன் கற்பின் திறனுடன் கோவலனுடன் வாழ்ந்தாள். கோவல னுடைய இன்பத்தையே தன் இன்பமாகக்கருதி அவள்நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக அவனுக்கு ஊடலும், கூடலும் அளித்து வந்தாள். மாதவி, சிலப்பதிகாரம் கற்கும்

பெருமக்களின் உள்ளத்தில் அழியா இடம் பெற்று விட்டவள். மாதவி, கோவலன் அன்பின் பயனாக மணிமேகலை பிறந்தனள். மாதவியை விட்டு கோவலன் பிரிந்த பின் மாதவி மிகவும் துயருற்றாள். தனது தோழி வசந்தமாலை மூலம் கடிதம் எழுதி அனுப்பினள். கோவலன் இதை ஏற்காமல் "பலவாறு நடிப்பதில் சிறந்த ஆடல் மகள் அவள் ஆதலின் அவளுக்கு அந்த நடிப்பெல்லாம் பொருந்தும்" என்றனன். இதைக் கேட்ட துராக்காதல் கொண்ட மாதவி இன்று வராவிடினும் நாளை வருவார் என இருந்தாள்.

> "மாலை வாரார் ஆயினும் மாணிழை
> காலைகாண் குவம்எனக் கையறு நெஞ்சமோடு
> பூமலர் அமளிமிசைப் பொருந்தாது வதிந்தனள்
> மாமலர் நெடுங்கண் மாதவி தானென்." (குவளி 115-18)

பிறகு கோவலன் தன் குலமகளோடு மதுரையை நோக்கிச் சென்று விட்டான் எனக் கேள்விப்பட்டு மாதவி மீளா துயருற்று கோசிகனிடம் திருமுகத்தை எழுதிக் கொடுத்து அதைக் கோவலனிடம் சேர்ப்பிக்குமாறு கூறினள். தன்னைவிட்டு கோவலன் போனதிற்குக் காரணம் தெரியாமல் தவித்தனள். மணி இழந்த நாகம் போல் பெருந்துயர் அடைந்தனள். மாதவி தான் பிறந்த குலத்தையும் கணிகையரின் வாழ்க்கையையும், ஆடல் கலையையும் பழித்து தன்னை நொந்து கொண்டிருந்தனள். பிறகு மாடலன் மூலம் கோவலன் கொலையிடப்பட்டதை அறிந்த மாதவி அலமந்தாள். கரைகாணாத் துயரக்கடலில் ஆழ்ந்தாள். சித்திராபதி, மணிமேகலையைக் குலத்தொழிலிற் ஈடுபடுத்த வேண்டுமென்று முயற்சித்தபோது மாதவி துறவு பூண்டாள். தன் மகளை அவ்வழியிலேயே செலுத்தினள். இவை அனைத்திற்கும் கோவலன் பால் கொண்ட அன்பும், மாதவியின் கற்பு மேம்பாடுமே காரணம் எனலாம். கலைகளைக் கற்றுத் தேர்ந்த மாதவி இவ்வாறு தவம் புரிவது நாணத்தக்கது என்று ஊரில் உள்ள சான்றோர்கள் மற்ற சான்றோர்களுடன் கூடி பேசிப் பழிக்கின்றார்கள் என்று வசந்தமாலை சொன்ன போதிலும் மாதவி தன் காதலன் இறந்தவுடன் "நானும் இறக்காமல் ஊரார் இழிச்சொல்லிற்கு ஆளாகி வருத்தத்துடனும், நாணத்தைத்

துறந்து வாழுகிறேன். காதலர் இறந்து விட்டால் மாதர் மனம் கொதித்து உயிர் துறப்பர்; சிலர் தீ வளர்த்து அதிற் பாய்ந்து மாள்வர். தீப்பாய்ந்து மாளாதவர் மறுமையில் உடன் வாழ்வ தற்காக நோன்பு நோற்பர். பத்தினிப் பெண்டிர் இவ்வாறெல் லாம் செய்வது உலக வழக்கம். கண்ணகி தன் கணவன் கொலையுண்டதை அறிந்து உளம் கொதித்து மதுரைமா நக ரத்தையே தீக்கிரை ஆக்கிவிட்டாள்" என்றனள். மாதவி தன் மணிமேகலையைக் கண்ணகியின் மகள் என்று கூறுமளவிற்குக் கோவலன் பால் அன்பு கொண்டிருந்தாள். என்னே மாதவியின் பெருமை! மாதவி கணிகையாக இருந்தாலும் கண்ணகியை மாறுபடுத்தாமல் தன் மகளை கண்ணகி மகள் என்றாள். இதன் மூலம் மாதவியின் அன்பின் திறம் நன்றாக விளங்குகிறது.

**மாதரி :**

அன்பும் பண்பும் மிக்கவள். இடையர் குலத்தைச் சார்ந் தவள். பசுவைக்காத்து பால் அளிக்கும் இடையர்கள் குற்ற மற்றவர்கள்:

> " ஆகாத்தோம்பி ஆப்பயன் அளிக்கும்
> கோவலர் வாழ்க்கையோர் கொடும் பாடில்லை."

இவள் மனத்தில் மாசில்லாதவள். பிறருக்கு ஒரு தீங்கும் நினை யாதவள். தரும சிந்தனை மிக்கவள். இவளிடம் கவுந்தியடிகள் கண்ணகியைப்பற்றிக் கூறி இவளிடம் கண்ணகியை ஒப்படைத் தனள். மாதரி மிகவும் பணிவன்போடு கண்ணகியைத் தன் பால் அழைத்துச்செல்ல உடன்பட்டனள். என்னே அவளுடைய கருணை நெஞ்சம்! கண்ணகியையும் அவள் கணவன் கோவ லனையும் பெருமகிழ்வு கொண்டு உபசரித்தாள். நறுமலர்க் கோதை கண்ணகியை ஆய்ச்சிகளுடன் கூடி நீராட்டினாள். தன்னுடைய மகள் ஐயையும் அவர்களுக்குப் பணிவிடை செய்ய விடுத்தனள். "இவர்கள் சிராவக நோன்பினர் இரவுண்ணார் உடனே சமையலுக்கு வேண்டிய சட்டிபானை பண்டங்களை கொண்டு வாருங்கள்" என ஆய்ச்சியரை ஏவினள். கண்ணகி பிறகு நன்குற சமைத்து கோவலனுக்குப் படைத்தனள். இக் கண்கொள்ளாக் காட்சியைக் கண்ட மாதரி,

"ஆயர்பாடியின் அசோதை பெற்றெடுத்த
பூவைப் புதுமலர் வண்ணன் கொல்லோ
நல்லமுதுண்ணும் நம்பி யீங்குப்
பல்வளை தோளையும் பண்டு நங்குலத்துத்
தொழுனை யாற்றினுள் தூமணி வண்ணனை
விழுமந் தீர்த்த விளக்குக் கொல்லென!"

எனக் கூறி மகிழ்ந்தாள். 'தென் மதுரையில் நமது ஆயர்பாடியில் உண்ட இந் நம்பி அன்று வடமதுரை ஆயர்பாடியில் அமுதுண்ட கண்ணனேயோ? இவனது துயர்தீர்த்த இத்தொடி வளை நங்கை, காளிந்தியாற்றில் கண்ணனை துயர்தீர்த்து மகிழ் வித்த இராதைதானோ' இந்தக் காட்சி கண்கொள்ளாக் காட்சி யென மிகவும் அகமகிழ்வு யெய்தினள்.

இவ்வாறு, மாதரி அவர்களுக்கு அன்பும் பரிவும் கொண்டு உபசரித்தனள். விதியின்பலனாகக் கண்ணகியின் கணவன்கொலை யிடப்பட்டபோது மிகவும் துயரெய்தினள். ஆராத்துயரக் கடலில் மூழ்கினள். தன் மகள் ஐயைக்கூடக் கருதாது உயிர் நீத்தாள். இதனால் நாம் மாதரியின் பண்பு நலத்தை தெள்ளென அறியலாம்.

கோப்பெருந்தேவி :

கண்ணகி சொன்னது கொண்டு தன்குற்றம் உணர்ந்த மன்னவன் அரியாசனத்திலிருந்து விழ்ந்து உயிர் துறந்தனன். கோப்பெருந்தேவி இதைப் பார்க்க இடியோசைக் கேட்ட நாகம் போல் நடுங்கினாள். பிறகு கண்ணகியைப் பார்த்து கணவனை யிழந்து துன்பப்படுகிறாய். கணவன்தான் நமக்கு தெய்வம். நீ விரபத்தினியெனக் கூறினள். கூறி, கண்ணகியின் பாதத்தில் விழ்ந்து கணவன் சென்ற வழியே சென்று விட்டாள். கணவனை இழந்த துயரை மாளாத கோப்பெருந்தேவி தன்னுயிர் கொண்டு கணவன் உயிரைத் தேடுவாள் போல உயிர் நீத்தாள். என்னே இந்த பத்தினிப் பெண்ணின் அன்பு.

வேண்மாள் :

சேரனிடம் வேடுவர்கள் மலையில் ஒர் காரிகையைக் கண் டோம் என முழுவதும் அவள் பற்றி சேரனிடம் கூறினர்.

இதனைக்கேட்ட மதுரை தமிழ்ச் சாத்தனர் கண்ணகிக்கும், கோப் பெருந்தேவிக்கும் நடந்தவற்றை விளக்கமாகக் கூறினர். அதனைக் கேட்ட சேரன் பத்தினித் தெய்வத்துக்குக் கோயில் எடுக்க வேண்டுமென விரும்பினுன். இது பற்றி தன் மனைவி யிடம் கேட்க விரும்பி வேண்மாளைக் கேட்டனன். இதற்கு அந்த பார் வேந்தன் மனைவி "கோப்பெருந்தேவி தன் கணவன் இறந் வுடன் மயக்கமுற்று அந்த நிலையிலேயே இறந்தாள். அவள் விண்ணுலகத்தில் நல்லபேறு பெறுவாளாக". ஆனல் கண்ணகி கணவனை இழந்து துயருற்று நமது நாட்டை வந்தடைந்தனள். ஆகவே பத்தினிக் கடவுளான கண்ணகிக்கே கோயில் அமைத் தல் வேண்டுமென எடுத்துரைத்தனள். என்னே இந்த அரசியின் ஆராய்வுத்திறன்.

இதுகாறும் கண்டவற்றல் செந்தமிழ்க் காப்பியங்களிலே சிறந்தது சிலப்பதிகாரம் என்றும் அதனையாத்த இளங்கோ வடிகள் பெண்மையின் சிறப்பையும் கற்பின் மேம்பாட்டையும் தாம் படைத்த பெண் பாத்திரங்களைக் கொண்டு தெள்ளத் தெளிய தீட்டியுள்ளார், என்றும் இதனை விளக்க அரசகுலத்து மகளிர் இருவரையும் (கோப்பெருந்தேவி, வேண்மாள்) குடி மகளிர் மூவரையும் (கண்ணகி, மாதவி, மாதரி) மூவரையும் ஒருங்கு வைத்து சிறப்பிக்கின்ருர் என்பதையும் அறிந்தோம்.

---

# சொக்கநாதர் திருவருட்பா

**மாணிக்கவாசகன்**
தருமையாதீனப் பல்கலைக்கல்லூரி முதல்வன்

---

[மலர் 12, இதழ் 1, பக்கம் 77-இன் தொடர்பு]

## கட்டுரை 2.

சிவபிரான் நாதாந்தில் விளங்குபவன். 'வாதமும் சமய பேதமும் கடந்த மனோலய இன்ப சாகரனே நாதமும் கடந்த வெளியிலே நீயும் நானுமாய் நிற்கும் நாள் உளதோ'? என்பது பட்டினத்துப் பிள்ளையார் திருவாக்கு.

இதனை ஒட்டியே இத் திருவருட்பாவில், நம் குருமாமணியும்,

'நாதமும் கடந்த போதசா கரமே
ஞானியர் பெறுமனோ கரமே'

என்று திருவாய் மலர்ந்தருளினர்.

'நம்பினவர்க்கு நடராசன் நம்பாதவர்க்கு எமராசன்' என்பது உலக வசனம். இதனை எண்ணியே 'நம் புலவர் துன்பம் துடைத்திடுங் குருவே' என்றுரைத் தருளிற்று அத் தேசிக ரத்நம். தருமையில் ஒன்பதாங் குருமகா சந்நிதானத்தின் திருவருள் பெற்றவர் இத் திருவருட்பாவின் ஆசிரியர் ஆகிய சிலத் திரு. சிவஞான தேசிகர். அதனால்,சொக்கநாதர்க்குரிய நவந்தரு பேதத்தொடு இதையும் உட்கொண்டு இருபொருளும் தோன்ற, 'நாலும் ஐந்தாகிய உருவே' என்று குறித்தருளினர்கள்.

தருமைச் சொக்கநாதர் திருக் கோயிற் சிகரம் உயர்ந்து விளங்கிடலின், மேகத்தைத் தடுக்கும் அளவினது என்று உயர்வு நவிற்சியாகக் கருதவைத்து, அம் மேகம் அச்சிகரியின் அருகில் ஊர்வது மேக வண்ணனாகிய மாயோன் (சீதரன் - திருமடந்தை மணாளன்; திருவைத் தரிப்பவன்) நாள்தோறும் திருவடி வழிபாட்டிற்குச் சேர்வது போலும் என்று குறித்தருளினர்.

" சீதரன் நாளும் சேவடி பணியச்
சேரல்போற் செழுமுகில் ஊரும்
சிகரிசேர் தருமை வளர் சொக்கநாதச்
செல்வமே சிற்சுகே தயமே."

இவ்வாறு தம் வழிபடுகடவுளை அழைத்துத் தமக்கு இல்லாத வற்றை உள்ளனவாகச் சொல்லி, அவற்றை வழுவாதும் நழு வாதும் காத்துவரும் நம்மனோர்க்கு அறிவுறுத்தியருளினர், இத் திருப்பாடலின் முற்பகுதியிலே.

நானே கொடியவன்; எதில்? பழக்கத்தில். என்னைப்போல் இவ்வுலகில் எவனையும் பார்க்க இயலாது; ஏன்? யாரும்இல்லையே!

நான் ஒருவனே பழகியுள்ளேன். எது செய்ய? பாதகமே செய்ய, எதனுடன் செய்ய? துணிவுடன் செய்ய. இது காயத் தின் செய்கை குறித்தது. இனி வாக்கின் சொல் குறித்து நோக்கிலோ என் மொழியெல்லாம் பொய்மொழிகளே, செய் கைக்கும் எண்ணத்திற்கும் இடைப்பட்டது சொல். சொல் பொய்ச் சொல்லாயின், செயலும் எண்ணமும் அப்பொய்க்குத் தப்புதல் அரிதே. அச்சொல் பொய்த்தல் போலச் செய்கையெல் லாம் வினையாகும். எண்ணம் அனைத்தும் வஞ்சகமே. ஏன்? வஞ்சகத்திற்கு என்று தனியே ஆக்கப்பட்ட ஒரு பீடம் என்றே சொல்லவேண்டும். செயலும் கொடியது; விண்செயலும் ஆம். சொல்லும் பொய், எண்ணமும் வஞ்சகம் ஆனால், சேரும் இடம் வேறுபடுமோ? கயவரினமே என் நயவரினம். கயவர்க்கும் தேவர்க்கும் ஒப்புரைத்தார் திருவள்ளுவர்; 'தேவர் அனையர் கயவர், அவரும் தாம் மேவன செய்தொழுகலான்' என்று, அன்னவருறவு தேவரையும் பழிக்கத் தூண்டும் எனின், ஏனை யாவரையும் போற்றவோ தூண்டும்? தூற்றத்தான் வேண்டும். சிந்தனை அனைத்தும் பெரியோர் நிந்தனையே. இங்கனம்,

மனம், வஞ்சக பீடம் ஆகிப் பெரியோர்களைக் குறித்துச் செய்யும் நிந்தனையே சிந்தனையாகக் கொண்டது.

வாக்கு, உரைக்கும் உரையெல்லாம் படிற்றுரையாயின. படிறு - பொய். காயம், பாதகத்தையே துணிந்து செய்யும் பழக் கத்திற் பூரணம் உற்றது. அம்மட்டோ? கயவரிணக்கமே காயத் திணக்கம்.

திரிகரணமும் இம்முறையில் எஞ்ஞான்றும் திரி(யும்)கரணம் ஆயின், அடியேனுக்கு உய்தியும் உண்டோ? 'உய்யும் வழி உண்டாயின், அவ்வழி எவ்வழி? தெய்வமே அடியேனுக்கு அதை அறிவித்தும் அவ்வழியில் ஒழுகச் செய்தும் அடியேனை ஆண்டு கொண்டும் அருள்வாய். இதை நாள்தொறும் பாடிப் பழகினுல் பயன் மிகவுண்டாகும்.

"பாதகம் துணிந்து புரிந்திட என்போல்
பழகிய கொடியன் இப் புவியில்
பார்க்கவும் உளதோ? நாயினேன் உரையோ
படிற்றுரை செய்கையோ அவமே
தீதுறு மனமோ வஞ்சக பீடம்
சேரிடம் கயவர்தம் கூட்டம்
சிந்தனை பெரியோர் நிந்தனை ஆயின்,
தெய்வமே உய்யும்ஆ றெதுவோ?"

"சிகரிசேர் தருமை வளர் சொக்கநாதா
செல்வமே சிற்சுகோ தயமே."

---

## ஒரு வேண்டுகோள்



**'ஞானசம்பந்தம்' இதழின் ஆண்டுக்கட்டணம் மாற்றம்**

அன்புடையீர்! வணக்கம், தங்களது ஒத்துழைப்பால் "ஞான சம்பந்தம்" பெருகி வளர்ந்து இருபதாம் ஆண்டு தொடங்குகிறது. பல காரணங்களையொட்டி ஆண்டுக் கட்டணத்தை 1-1-1961 முதல்

**உள்நாடு ரூ. 2-25** **வெளிநாடு ரூ. 3-00**

என்று மாற்ற முடிவு செய்துள்ளோம். சந்தாதாரர் அனைவரும் இம் மாற்றத்தை ஏற்று. மேலும் எங்களோடு ஒத்துழைத்துப் பத்திரிகை வளர்ச்சிக்கு உதவவேண்டுகிறோம்.

— செயலாளர்.

## கலேக்கோவிலில் வரப்பெற்றுக்கொண்ட புத்தகங்களின் விபரம். (தொடர்ச்சி)

| தொடர் எண் | புத்தகத்தின் பெயர் | ஆசிரியரின் பெயர் |
|---|---|---|
| 8791 to 8800 | சமய குரவரும் சந்தான குரவரும் | தருமையாதினம் |
| 8801 | திரு அருட்பாத் திரட்டு | ஷை |
| 8802 | தக்ஷிண மூர்த்தி திருவருட்பா | ஷை |
| 8803 | திரு அகத்தியான்பள்ளி திருப்பதிகம் | ஷை |
| 8804 | திருக்கோடிக்குழகர் கோயில் திருப்பதிகம் | ஷை |
| 8805 | திரு ஆப்பனூர்த் திருப்பதிகம் | ஷை |
| 8806 | திருஏடகம் திருப்பதிகங்கள் | ஷை |
| 8807 | திருக்குற்ருலத் திருப்பதிகங்கள் | ஷை |
| 8808 | திருக்குறுகைத் திருப்பதிகங்கள் | ஷை |
| 8809 | திருக்கயிலாய யாத்திரை | ஷை |
| 8810 to 14 | Mutt and Temples | ஷை |
| 8815 | கணபதி கந்தர் தேவராத்திரட்டு | ஸ்ரீ காசி மடம் |
| 8816 | திருக்கேதாரத் திருப்பதிகங்கள் | ,, |
| 8817 | திருவண்ணுமலேத் தேவாரத்திருப்பதிகங்கள். | ,, |
| 8818 | திருவுந்தியார் | ,, |
| 8819 | திருக்குறள் - பொருட்பால் - பரிமேலழகர்உரை - இலக்கணக் குறிப்பின் விளக்கம் | ஸ்ரீ குமரகுருபரன் சங்கம் |

| | | |
|---|---|---|
| 8820 | சிவபுராணம், விநாயகர் அகவல், கந்தர்கலிவெண்பா | ஸ்ரீ குமரகுருபரன் சங்கம் |
| 8821 | திருமந்திர மாநாட்டு மலர் | திருவாவடுதுறை ஆதீனம் |
| 8822 | முத்தநாயனுர் திரு விரட்டை மணிமாலை | திருவாவடுதுறை ஆதீனம் |
| 8823 | சிவப்பிரகாசம் சீர்மைக்கட்டுரை | ஷை |
| 8824 | ,, ,, (உரைநடை) | ஷை |
| 8825 | திருத்தொண்டர் மாலை | ஷை |
| 8826 & 27 | மநு விஞ்ஞானேசுவரீயம் என்னும் மிதாக்ஷரத்தின் வழிநூல் | மகா மகோபாத்யாய டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் நூல் நிலையம். |
| 8828 | தமிழ்ப்புலவர் வரிசை 7-ம் பகுதி | கழகவெளியீடு |
| 8829 | தமிழ் நாட்டு வள்ளல்கள் | ஷை |
| 8830 | பிள்ளையார் | அமுத நிலையம், தேனும்பேட்டை |
| 8831 | லட்சுமி | ,, |
| 8832 | திருப்பாவை | ,, |
| 8833 | கண்ணன் பிறந்தான் | ,, |
| 8834 | நவராத்திரியின் கதைகள் | ,, |
| 8835 | திருக்குற்றுலம் | ,, |
| 8836 | விழா, விரதம், பண்டிகை | ,, |
| 8837 | நாயன்மார் கதை | கி. வா. ஜகந்நாதன் |
| 8838 | பழனித் திருநாமம் | ,, |
| 8839 | மங்கள வல்லி | ரசபதி அடிகள். |
| 8840 | திருமுறை மலர்கள் | கி. வா. ஜகந்நாதன் |

| | | |
|---|---|---|
| 8841 to 47 | பிரதிபேத ஆராய்ச்சி | மு. இராமகிருட்டினன் |
| 8848 | சிவஞான சித்தியார் | ச. பா. சிவப்பிரகாசம் பிள்ளை |
| 8849 | கந்தபுராண வரலாறு | சுவாமிமலை ஸ்ரீசுவாமிநாதசுவாமி தேவஸ்தானம் |
| 8850 | ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள் தோத்திர மஞ்சரி | S. V, சுப்பிரமண்யம் சகோதரர்கள் |
| 8851 | விநாயக பரத்துவம் | அச்சுவேலி. ச. குமார சுவாமிக் குருக்கள் |
| 8852 | மகோற்சவ விளக்கம் | ஷை |
| 8853 | செயங் கொண்டார் வழக்கம் | தி. சந்திர சேகரன். |
| 8854 | ஐம்முகச் சிவனும் அறுமுகப் பரமனும் | திரு. பு. உ. கே. நடராஜ பிள்ளை |
| 8855 & 56 | முத்துக்குமார சாமி பிள்ளைத் தமிழ் (பாட்டும், சொற்பொருளுரையும்) | வித்துவான். திரு. அடிகளாசிரியர் |
| 8857 | மெய்கண்டார் அருளிய சிவஞானபோதம் (எளியவுரை) | க. அரங்கசாமி முதலியார் |
| 8858 | ,, (மூலமும் தெளிபொருள் விளக்கமும்) | ரா. சண்முகசுந்தரம் செட்டியார் |
| 8359 | ,, (உரைச் சுருக்கம்) | தி. பட்டுசாமி ஓதுவார் |
| 8860 | ,, (உரையுடன்) | கா. மு. சுந்தர முதலியார். |
| 8861 | ஆடல் வல்லான் | திருவிடை மருதூர் ஸ்ரீ மகாலிங்கசுவாமி தேவஸ்தானம் |
| 8862 & 63 | ஸ்ரீ குஹாவதார ரகசியம் | சைவப்பிரகாச சபை, புத்தன்சந்தை |
| 8864 | பத்துக் கட்டளைகள் (விளக்கத்துடன்) | ஸ்ரீ மெய்கண்ட சித்தாந்த சபை, குடந்தை |
| 8865 | பன்னிருதிருமுறைத் திரட்டு | திரு. சோமசுந்தரம் செட்டியார் |

---

(தொடரும்)

## திருப்பனந்தாள் - ஸ்ரீ காசி மடம்

# 'திருமுறை வெளியீடுகள்'

| | | | ரூ. | ந. பை |
|---|---|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை | ... | 0 | 06 |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் | ... | 6 | 00 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் | ... | 3 | 00 |
| 4 | திருஞானசம்பந்தர் தேவாரம் (மூலம்மட்டும்) அச்சில் | ... | | |
| 5* | திருநாவுக்கரசர் தேவாரம் ,, | ... | 2 | 25 |
| 6* | சுந்தரர் தேவாரம் (புதிய பதிப்பு) ,, | ... | 1 | 30 |
| 7* | திருவாசகம் (புதிய பதிப்பு) ,, | ... | 0 | 50 |
| 8* | திருக்கோவையார்-பேராசிரியர் உரையும் பழையவுரையும் (புதிய பதிப்பு) | ... | 2 | 90 |
| 9 | ஒன்பதாம் திருமுறை-திருவிசைப்பா திருப்பல்லாண்டு (மூலம்மட்டும்) | ... | 0 | 56 |
| 10* | திருமந்திரம் ,, (புதிய பதிப்பு) | ... | 2 | 25 |
| 11 | பதினோராந்திருமுறை ,, | ... | 1 | 25 |
| 12 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (புதிய பதிப்பு) | ... | 0 | 25 |
| 13 | திருக்கைலாயஞானவுலா - உரையுடன் | ... | 0 | 50 |
| 14 | பெரிய புராணம் (மூலம்மட்டும்) | ... | 2 | 50 |
| 15* | அகத்தியர் தேவாரத்திரட்டு | ... | 0 | 37 |
| 16 | திருவிளையாடற் புராணம் (மூலம்மட்டும்) | ... | 3 | 00 |
| 17 | தாயுமான சுவாமிகள் பாடல்-குறிப்புரையுடன் (அச்சில்) | ... | | |
| 18 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம்மட்டும்) | ... | 1 | 75 |
| 19 | கந்தபுராணம் – முதல் மூன்று காண்டங்கள் ,, | ... | 2 | 75 |
| 20 | ,, யுத்த தேவகாண்டம் ,, | ... | 2 | 00 |
| 21 | ,, தக்ஷகாண்டம் ,, | .... | 1 | 50 |
| 22 | கந்தபுராண வசனம் (அச்சில்) | | | |
| 23 | கந்தர் அலங்காரம் - குறிப்புரையுடன் | ... | 0 | 25 |
| 24 | கந்தரனுபூதி | ... | 0 | 13 |
| 25 | கந்தர் கலிவெண்பா – ஆங்கிலம் ஹிந்தி மொழி பெயர்ப்புக்களுடன் | ... | 0 | 37 |
| 26 | கந்தர் கலிவெண்பா - மூலம் மட்டும் | ... | 0 | 06 |
| 27 | கந்தர் கலிவெண்பா - மூலமும் – உரையும் | ... | 0 | 37 |
| 28 | நீதிநெறி விளக்கம்-ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | ... | 0 | 50 |
| 29 | சகலகலாவல்லிமாலை – ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | ... | 0 | 06 |
| 30 | சிவஞான சித்தியார், ஹிந்தி மட்டும் | ... | 1 | 00 |
| 31 | திருக்குறள் - அறத்துப்பால் மூலம் குறிப்புரையும் ஹிந்தி மொழி பெயர்ப்பும் | ... | 1 | 50 |
| 32 | திருக்குறள் – பொருட்பால் ,, | ... | 2 | 50 |
| 33 | திருக்குறள் – காமத்துப்பால் ,, | ... | 1 | 00 |
| | ஷை 31, 32, 33 திருக்குறள் 3 புத்தகமும் | ... | 4 | 00 |

Registered With the Registrar of Newspapers for India
Under No R. No. 1485/57.

Regd No. M. 5574 குமரகுருபரன்.

| | | | |
|---|---|---|---|
| 34 | திருக்குறள் மூலமும் குறிப்புரையும் | ... | 0 75 |
| 35 | திருக்குறள் - பொருட்பால் பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் | ... | 0 13 |
| 36 | முதுமொழி மேல் வைப்பு (குறிப்புரையுடன்) | ... | 0 75 |
| 37 | திருவுசாத்தானக் கல்லெழுத்துக்கள் | ... | 0 37 |
| 38 | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா - மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் - மதுரைக் கலம்பகம் - நீதிநெறி விளக்கம் - மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணி மாலை- மதுரை மீனாட்சியம்மை குறம் | ... | 2 75 |
| 39 | திருவாரூர் நான்மணிமாலை – முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் | ... | 1 25 |
| 40 | சிதம்பர மும்மணிக்கோவை - சிதம்பரச் செய்யுட்கோவை- தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை | ... | 1 00 |
| 41 | பண்டார மும்மணிக் கோவை – காசிக் கலம்பகம் – சகலகலாவல்லி மாலை | ... | 1 00 |
| 42 | சிதம்பரச் செய்யுட்கோவை | ... | 0 75 |
| 43 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் [அச்சில்] | | |
| 44 | தமிழிசைப்பாக்கள் [அச்சில்] | | |
| 45 | பெரியபுராணம் – உரைநடை | ... | 2 00 |
| 46 | திருவிளையாடற் புராணம் – உரைநடை | ... | 2 25 |
| 47 | குமரகுருபர சுவாமிகள் ஜீவிய சரித்திரப்பட விளக்கங்களும் கந்தர்கலிவெண்பா விளக்கப்படங்களும் | ... | 0 50 |
| 48 | அபிராமி பட்டர் பிரபந்தம் (மூலம்மட்டும்) (அச்சில்) | ... | |
| 49 | திருக்கயிலைத் திருமுறை | ... | 0 37 |
| 50 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் | ... | 0 19 |
| 51 | செந்திலாண்டவன் மகிமை | ... | 0 13 |
| 52 | திருக்குறள் - உரைக்கொத்து - அறத்துப்பால் 3-ம் பதிப்பு | ... | 1 37 |
| 53 | ஷ ஷ பொருட்பால் | ... | 2 75 |
| 54 | ஷ ஷ காமத்துப்பால் | ... | 1 20 |
| 55 | அபிராமி அந்தாதி – தெளிவுரையுடன் | ... | 0 50 |

மேலேகண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோவில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள்,
"தியாகராஜ விலாசம்" 53, பிள்ளையார் கோவில்தெரு,
திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை - 5.

குறிப்பு:- * இக்குறியிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப்பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் திருக்குறள் உரைக்கொத்து (எண் 52, 53, 54) தவிர்த்து எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச்சாரும்.

அச்சிட்டது:— குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம் – '61.